# இருபெருந்தலைவர்



ந. சஞ்சீவி, எம். ஏ.,
*தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பர் கல்லூரி,*
காஞ்சிபுரம்.

*விற்பனை உரிமை:*

**பாரி நிலையம்**
*59. பிராட்வே, சென்னை 1.*

விலை ரூ. 1·00

முதற்பதிப்பு: அக்டோபர், 1958
(காந்தி அடிகள் வார வெளியீடு)



## ஆசிரியரின் மற்ற நூல்கள்

**இலக்கியம் :**

சங்க காலச் சான்றோர்கள்
காற்றிலே மிதந்தவை
சிலப்பதிகார விருந்து
கவிஞர் தரும் காட்சி
உணர்வின் எல்லை

**வரலாறு :**

1806
வீரத்தலைவர் பூலித் தேவர்
முதலில் முழங்கிய முரசு
தமிழகத்தில் விடுதலை வேள்வி
வெள்ளையர் கண்ட வீரத் தமிழகம்
விடுதலை இயக்க வரலாறு
வெள்ளை ஆதிக்க வரலாறு
மானங்காத்த மருது பாண்டியர்
மருதிருவர்
வேலூர்ப் புரட்சி

முத்தமிழ் அச்சகம், காஞ்சிபுரம்.

'கலைமகள்' ஆசிரியர்

## உயர்திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

## அணிந்துரை

அன்பர் திரு. ந. சஞ்சீவி அவர்கள் இந்த நாட்டு வரலாற்று ஏடுகளைப் புரட்டிப் பார்த்துப் பழங்காலத்தில் ஒளிர்ந்து இன்று ஒளிந்து நிற்கும் மணிகளைப் பற்றிய செய்திகளைக்கொணரும் இலக்கியப் பணியில் ஈடுபட்டிருக்கிறார். மன்னர்களும், குறுநில மன்னர்களும், வீரர்களும், பிறர்க்கென வாழ்ந்த பெரியோர்களும், கலைஞர்களும், வள்ளல்களுமே ஒரு நாட்டின் பெருமைக்குக் காரணமாய் இருக்கிறார்கள். அவர்களை மறந்தால் நாட்டு வரலாறு என்ற ஒன்று தனியாக வந்து நிற்பதில்லை. பெரிய கட்டடத்துக்குச் சிறு செங்கற்களும் பெரிய விட்டங்களும் அவ்வவற்றின் இடங்களில் எப்படி இன்றியமையாதனவாய் அமைந்து விளங்குகின்றனவோ, அப்படித்தான் ஒரு நாட்டின் வரலாறு என்னும் மாளிகையிலும் பண்புடை மக்கள் இன்றியமையாத உறுப்புக்களாய் அமைந்து நலம் செய்திருக்கிறார்கள். அவர்கள் சமுதாயத்தில் நின்ற நிலையும், பெற்ற பதவியும் சிறியதாகவோ, பெரியதாகவோ இருக்கலாம். ஆனாலும், அவர்கள் செய்த செயல் பின் வளர்ந்த பெரிய செயல்களுக்கு அடிப்படையாய் இருந்திருக்கும்.

இந்தச் சிறுநூலில் வரும் இரண்டு பெரியவர்களும் பின் வளர்ந்த பெரிய ஆற்றலுக்கு முன்னோடிகளாய் இருந்தவர்கள். காஜுலு லட்சுமிநரசு செட்டி

யார் கிழக்கிந்தியக் கும்பினியின் கொடுங்கோன்மையை எதிர்த்து நாவாலும் பேனாவாலும் போராடிய வீரர். 'கும்பினிக் கோழி முட்டை அம்மிக் கல்லையும் உடைக்கும்,' என்று மிகவும் பெரியவர்களும் அஞ்சிய காலத்தில், தாம் எதற்கும் அஞ்சாது ஆங்கில நாட்டுக்கு விண்ணப்பத்தின்மேல் விண்ணப்பம் அனுப்பிக் குறைகளைத் தீர்த்துக்கொண்ட தீரர். இந்தியா கும்பினியின் ஆட்சியினின்றும் ஆங்கிலேய அரசின் கைக்கு மாறச் செய்த பெருந்தொண்டர்களுள் அவர் ஒருவர். ஆட்சிப் பீடத்தில் உள்ளவர்களுக்கு அஞ்சாது நேர்மையுடனும் துணிவுடனும் கருத்தை வெளிப்படுத்தி மக்கள் கருத்தையும் தம் சார்பில் உருவாக்கிக் கருத்துப்படை திரட்டிய தொண்டு அவருக்குப் பெருமை தந்தது. பின்னாலே இந்த நாடு விடுதலையைப் பெறுவதற்காகப் பல பெருமக்கள் சமாதான முறையில் வாதித்து நிற்கும் வழியைக் காட்டியவர் அவர் என்றே சொல்லலாம்.

சேலம் இராமசாமி முதலியார் இந்த நாட்டுக்காகச் செய்த தொண்டு பல. இந்நாட்டு மக்கள் நிலையை மேல் நாட்டுக்குச் சென்று வகுத்துரைத்த முதல்வர் அவர்; தேசபத்தர் திருக்கூட்டத்தில் சேர்ந்து காங்கிரஸை வளர்த்தவர். அதோடு, இன்று தமிழர், "எம்முடைய இலக்கியச் செல்வம் மிகப் பழையது. இதற்கு இணை வேறு இல்லை" என்று பெருமிதத்தோடு கூறுவதற்குரிய அற்புதத் தொண்டைத் தமிழ்ப் பேராசான் டாக்டர்—மகாமகோபாத்தியாய—ஐயரவர்கள் மேற்கொள்ளத் தூண்டுகோலாய் இருந்தவர் சேலம் இராமசாமி முதலியாரவர்களே. ஆதலின், சங்கச் செய்யுளில் இன்பம் காண்பார் யாவரும் ஐயரவர்களைப் போற்

றுவதோடு அவர்களுடைய அறிவுக் கங்கையை அத்துறையில் திருப்பிவிட்ட முதலியாரவர்களையும் போற்ற வேண்டும்.

இந்த இருவர் வரலாறுகளையும், பல ஆதாரங்களைத் தேடித் தொகுத்து எழுதிய அன்பர் சஞ்சீவியின் தொண்டு பாராட்டுவதற்குரியது. இத்துறையில் இன்னும் பல அரிய பெரிய நூல்களை இவர் எழுதிப் புகழ் பெற வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

கி. வா. ஜகந்நாதன்
6—10—'58

# முன்னுரை

மொழிப்பற்றையும் நாட்டுப் பற்றையும் தம இரு கண்களெனப் போற்றித் தேசத் தொண்டே தெய்வத் தொண்டென வாழ்ந்த இருபெருந்தலைவரின் சான்றாண்மை ஒளி வீசும் வாழ்க்கை வரலாற்றைக் கூற முயல்வது இந்நூல். ஆம். தமிழ்மொழியில் தமிழ் மக்கட்குப் பழம்பெருந்தமிழ் நாட்டுத் தலைவர் இருவரைப் பற்றிய பல்வேறு செய்திகளையும் முதன்முதலாக எடுத்துக் கூறும் இந்நூல் அச்சான்றோர்களைப் பற்றி மேலும் பல செய்திகளை அறிந்துகொள்வதற்குச் சிறந்ததொரு தூண்டுகோலாக விளங்க வேண்டும். அதுவே என் ஆசை.

இந்நூலில் உள்ள 'அறப்போர் அண்ணல்' என்ற கட்டுரை, 1958-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்கள் 17-ஆம் நாள் வெளி வந்த சுதந்தர தின 'சுதேசமித்திரன்' வாரப் பதிப்பிலும், 24-8-'58 வாரப் பதிப்பிலும் அழகிய படங்களுடன் காட்சி அளித்தது. 'முதற்பெருந்தமிழர்' என்ற கட்டுரை, சென்னை அரசாங்க வெளியீடும் சமூக நல இதழுமாகிய 'சௌபாக்கியத்'தில் 1958-ஆம் ஆண்டு பிப்பிரவரித் திங்களில் சுருங்கிய வடிவில் வெளியிடப் பெற்றது; பரிசும் பெற்றது! இந்நூல் வெளி வரும் இச்சந்தர்ப்பத்தில் என் கட்டுரைகளை வெளியிட்டு என்னை ஆதரித்த 'சுதேசமித்திரன்', 'சௌபாக்கியம்' இதழ் ஆசிரியர்கட்கு என் உளங்கனிந்த நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

'முதற்பெருந்தமிழர்' என்ற கட்டுரையில் பெரும்பேராசிரியர் டாக்டர். உ. **வே. சாமிநாத ஐயர்** அவர்களின் 'என் சரித்திரத்'திலிருந்து விரிவாக மேற்கோள்களை எடுத்துக்காட்ட மனமுவந்து அனுமதி வழங்கிய ஐயரவர்களின் பேரர் உயர்திரு. **க. சுப்பிரமணிய ஐயர்** அவர்கட்கு யான் பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூலுக்கு அழகியதோர் அணிந்துரை வழங்கி வாழ்த்தியுள்ள 'கலைமகள்' ஆசிரியர் பெருந்தகை உயர்திரு. **கி. வா. ஜகந்நாதன்** அவர்கட்கு என் பணிவார்ந்த நன்றி கலந்த வணக்கங்கள் உரியன.

வழக்கம் போல இந்நூலைச் செப்பம் செய்து உதவிய மகாவித்துவான் உயர்திரு. **மே. வீ. வேணு கோபாலப் பிள்ளை** அவர்கள் அருட்டிறத்தை என்றும் மறவேன்.

காந்தி அடிகள் வார வெளியீடாக வெளிவரும் இந்நூலைத் தமிழ் மக்கள் ஆர்வத்துடன் போற்றி என்னை மேலும் மேலும் இத்துறையில் ஊக்குவார்கள் என்று உறுதியாக நம்புகிறேன்.

வாழிய செந்தமிழ்!  வாழ்க காந்தியம்!

**ந. சஞ்சீவி**
*8-10-'58*

## துணை கொண்ட நூல்கள்


1. கலைக்களஞ்சியம், தொகுதிகள்—1, 3.
2. சாமிநாத ஐயர் உ. வே. —என் சரித்திரம் (1950)
3. சென்னை அரசாங்க வெளியீடு
   —சுதந்தரச் சுடர் (1957)
4. Pachaiyappa's College Centenary
   Commemoration Book (1942)
5. Parameswaran Pillai, G.
   —(1) Representative men of
   Southern India (1896)
   —(2) Representative Indians
   (1897)

*அருமைத் தலைவர்*

**உயர்திரு. ம. பொ. சிவஞானம்**

அவர்கட்கு

# I

# அறப்போர் அண்ணல்

'சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன்னே சென்னையில் தீவிரமான அரசியல் கிளர்ச்சி நடைபெற்றதென்றும், அந்தக் கிளர்ச்சிக்கு முக்கியஸ்தராயிருந்தோர் சி. ஐ. டி. போலீஸாரால் கண்காணிக்கப்பட்டு வந்தனரென்றும் சொன்னால், நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள் அல்லவா? ஆனால், அஃது உண்மை. காஜுலு லட்சுமி நரசு செட்டியார் என்றால், அப்போதைய அரசாங்கத்திற்கும் ஐரோப்பிய சமூகத்திற்கும் கொஞ்சம் நடுக்கந்தான்! பொதுஜன அபிப்பிராயம் என்பதை நமது தமிழ் நாட்டில் முதன்முதலாக உருப்பெறச் செய்தவர் லட்சுமி நரசு செட்டியார் என்று திண்ணமாகச் சொல்லலாம்'

—அறிஞர் வெ. சாமிநாத சர்மா.[1]

இன்பத் தமிழகம் வரலாற்று உணர்ச்சியோடு எண்ணி மகிழ்ந்து இறுமாப்புக் கொள்ளுதற்குரிய பெருமை மிக்க நல்யாண்டு 1806.[2] இந்தியாவின் விடுதலைக்கு வித்தூன்றிய வேலூர்ப்புரட்சி—பாரதத்தின் இராணுவப் புரட்சி—நடைபெற்ற மாண்பு மிக்க ஆண்டன்றோ 1806? வீரத்தமிழ்ச் சிப்பாய்களால் தமிழகத்தின் வடவெல்லையில் நடத்தப்பெற்ற வேலூர்ப் புரட்சியின் விழுப்புகழ் அளவிடற்கரிது. பாரதத்தின் விடுதலைக்கு முதன்முதல் போர் முரசு கொட்டிய பெருமை தமிழகத்திற்கு உண்டு.[3] அப்பெருமை மிக்க வரலாற்றில் தனிச்சிறப்பு வாய்ந்த புகழ் வேலூர்ப் புரட்சிக்கு உண்டு. 1806ல் நடைபெற்ற

வேலூர்ப் புரட்சி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை வேரறுக்க இந்தியாவின் ஏனைய பகுதிகளெல்லாம் உறங்கிக்கொண்டிருந்த நேரத்தில், தமிழகம் எடுத்த முயற்சியின் இறுதிக் கட்டம். ஆனால், அப்புரட்சியில் தமிழ் மக்கள் ஆன்மிக வெற்றியே கண்டார்கள். வேலூர்ப் புரட்சியின் விளைவாக, ஏகாதிபத்தியத்தின் ஆயுத பலத்தை அற ஆற்றலாலேயே முறியடிக்க முடியும் என்ற உண்மையை முதன்முதலாக உணர்ந்தவர்கள், தமிழ் மக்கள். ஆம். இந்த வகையிலும் இந்தியாவின் ஏனைய பகுதிகளெல்லாம் அறிவொளி பெறுவதற்கு முன்பே அறிவொளி-அறவொளி-பெற்ற திருநாடு தமிழ்நாடு. இவ்வுண்மை தமிழரல்லாத ஒருவர்-சென்னை அரசாங்க ஆவணக்களரியின் தலைவர் பேரறிஞர் டாக்டர் பாலிகா அவர்கள் கூற்றாலும் இனிது விளங்கும்.[4]

இவ்வாறு, இந்தியாவின் வடபகுதி ஆயுத பலத்தால் அன்னியனை வெல்லலாம் என்று அடிமை உறக்கத்தினின்றும் எழுந்து முழங்கிய ஆண்டிற்கு—1857ஆம் ஆண்டுப் புரட்சிக்கு—அரை நூற்றாண்டிற்கு முன்பே — ஐம்பத்தோர் ஆண்டுகட்கு முன்பே தமிழகம் ஞான ஒளி பெற்றது. அதன் பயனாக வெள்ளை ஏகாதிபத்தியக் கொடுமையை மெல்ல மெல்லச் சாகடிக்க, வாழையடி வாழையாகத் தோன்றிய அறவீரர் திருக்கூட்டத்திற்குத் தலைமை தாங்கும் தன்னிகரில்லாப் பெருமை படைத்த பெரியார் ஒருவர் வேலூர்ப் புரட்சி தோன்றி முடிந்த 1806-ஆம் ஆண்டிலேயே தமிழகத்தின் தலைநகரிலேயே—தோன்றினார். அவர்தான் மாபெருந்தேசபக்தர் காஜுலு லட்சுமி நரசு செட்டியார் அவர்கள். [5]காந்தியடிகள் பிறப்பதற்கு 63 ஆண்டுகட்கு

முன்பே, [6]காங்கிரஸ் தோன்றுவதற்கு 79 ஆண்டு கட்கு முன்பே, காஜுலு லட்சுமி நரசிம்முலு செட்டியார் செந்தமிழ் நாட்டின் திருநகராம் சென்னையில் பெரியமெட்டில் பிறந்தார்.

செட்டியாரின் தந்தையார், சித்தாலு செட்டியார் சிறந்த வணிகர். செல்வச் சிறப்பும், கல்வியில் நாட்டமும் படைத்த தந்தையார்க்குப் பிறந்த காஜுலு லட்சுமி நரசிம்முலு செட்டியார் சிறந்த முறையில் ஆங்கிலக் கல்வி பயிலுவதற்குப் பெருந்தடையாய் ஏதும் இல்லை. ஆனால், அந்நாளில் ஆர்வமுடைய இளைஞர்களுக்கு அறிவொளி தர—ஆங்கில மொழி கற்பிக்க—புத்துலக அறிவு புகட்ட—பள்ளிக்கூடந் தான் இல்லை. பின்னாளில் இந்தியாவில் ஆங்கிலக் கல்வியைச் சிறந்த வகையில் அறிமுகப்படுத்திய பாதிரிமார்கள், பாரதத்தை நோக்கிப் புனித யாத்திரை தொடங்காத காலம் அது. எனவே, சாதாரணப் பள்ளிக்கூடம் ஒன்றில் சேர்ந்து கல்வி பயின்றார் லட்சுமி நரசிம்முலு. பின்னாளில் பச்சையப்பர் அறங்காவலர் குழுவில் உறுப்பினராய் விளங்கி, கல்விக்குப் பெருந்தொண்டாற்றிய அவரது ஆரம்பக் கல்விக்கு வழி வகுத்துக் கொடுத்த பெருமை, அந்நாளில் சென்னை மாநகரில் சிறப்புடன் விளங்கிய நேட்டிவ் அசோசியேஷன் சொசைட்டி ஸ்கூல்[7] என்ற சுதேசிப் பள்ளிக்கூடத்தையே சாரும். வணிகத் துறையில் மூழ்கி ஆகூழின் துணையால் அரும்பொருள் திரட்டிய வண்ணம் இருந்த செட்டியாரின் தந்தையாருக்குத் தம் பிள்ளை கல்வித் துறையில் அடிப்படையான ஞானம் பெற்றதும், தம்மோடு வாணிபத் துறையில் உழைத்து மேல் நிலை பெறவேண்டும் என்ற ஆர்வமே மிகுதியாய் இருந்

தது. ஆனால், லட்சுமி நரசிம்முலுவுக்கோ, கல்வித் துறையின் எல்லை காணும் ஆர்வமும் முயற்சியும் இளம்பருவத்திலேயே இயற்கையாகவே அமைந் திருந்தன. தம் தனிச் சிறப்புகளை இழக்கவும் நெஞ் சுறுதியைக் கைவிடவும் ஒரு நாளும் இசையாத உறுதி கொண்டவராய்ப் பிள்ளைப் பருவத்திலேயே விளங்கினார் லட்சுமி நரசிம்முலு. 'விளையும் பயிர் முளையிலேயே தெரியும்' என்பதுபோலப் பின்னாளில் பேராண்மையாளராய் விளங்குவார் லட்சுமி நரசிம் முலு என்பதற்குரிய பண்புகள் அவர்தம் மாணவப் பருவத்திலேயே காணப்பட்டன. பள்ளிக்கூடங் களில் நடைபெற்ற பட்டி மன்றக் கூட்டங்களிலெல் லாம் கலந்துகொண்டு, உரையாற்றுவதிலும் வாதிடுவதிலும் தனி ஆர்வம் காட்டினார் லட்சுமி நரசிம்முலு. கலை பயிலும் காலத்திலேயே நாட்டின் அரசியல் பிரச்சினைகளில் அவருக்கிருந்த ஆழ்ந்த அறிவும், ஆர்வமும் அச்சந்தர்ப்பங்களில் நன்கு புலனாயின.

பள்ளிப் படிப்பு முடிந்ததும் லட்சுமி நரசிம்முலு தந்தையாரின் கடையில் வேலைக்கமர்ந்தார். வாணி கத் துறையில் பெற வேண்டிய ஆரம்பப் பயிற்சியெல் லாம் அடைந்த லட்சுமி நரசிம்முலு தந்தையாரின் வாணிபத்தில் பெரும்பங்கு ஏற்றார். தந்தை யாரும் மைந்தரும் சேர்ந்து சித்தாலு செட்டி அண்டு கோ என்ற பெயரால் வாணிகம் நடாத்தினர். அந்த நிறுவனம் சிறப்பாக லுங்கி வியாபாரம் செய்வதில் கவனம் செலுத்தியது. இத்துறையில் சிறந்த இலாபம் கம்பெனிக்குக் கிடைத்துக்கொண்டிருந்த நாளில் கம்பெனியின் முழுப் பொறுப்பையும் லட்சுமி நரசிம்முலு செட்டியாருக்கே வைத்துவிட்டுச் சித்

தாலு செட்டியார் காலமானார். தந்தையாரை இழந்த மகனார் கம்பெனியின் பெரும்பொறுப்பையும் தாங்க நேர்ந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் அமெரிக்காவில் உள்நாட்டுப் போர் மூண்டது. இதன் விளைவாக அவர்களுடைய பருத்தி வியாபாரம் பெரிதும் தடைப்பட்டது. எனவே, எகிப்திலும் இந்தியாவிலும் பருத்தி வியாபாரத்திற்குப் பெருத்த வாய்ப்புகள் ஏற்பட்டன. காலம் கொடுத்த வாய்ப்பை நன்றாகப் பயன்படுத்திக்கொண்டார் லட்சுமி நரசிம்முலு; குறுகிய காலத்தில் பெருத்த இலாபத்தை அடைந்தார்.

ஏராளமான செல்வம் திரண்ட நேரத்தில் லட்சுமி நரசிம்முலுவுக்குப் பணத்திலிருந்த நாட்டம், புளியம் பழமும் ஓடும்போலாயிற்று; விளையும் பயிராய் இருந்த காலத்திலேயே அவரிடம் காணப்பட்ட பொதுநல ஆர்வம், செயலாக உருப்பெறலாயிற்று. இரவு பகலாகத் தம் தாய் நாட்டு மக்களின் அரசியல் விடுதலைக்காகவும், மேம்பாட்டிற்காகவும் உழைக்கத் துணிந்தார். அந்நாளில் நம் நாட்டு மக்கள் அறியாமை இருளில் மூழ்கிக் கிடந்தார்கள். ஆங்கிலக் கல்வியின் ஒளி சிறிதும் பரவாத அக்காலத்தில், நம் முன்னோர்கட்குத் தம்மை ஆள்பவர் யார் என்றும் அறிய இயலாத நிலையில், கண்ணிருந்தும் குருடராய், காதிருந்தும் செவிடராய், வாயிருந்தும் ஊமையராய் வாழ்ந்திருந்தனர். இந்நிலையில் நாட்டு மக்களின் அவல நிலை கண்டு லட்சுமி நரசிம்முலு கொண்ட ஆத்திரத்திற்கோர் அளவில்லை. துன்பத்திலும் அறியாமையிலும் மூழ்கிக் கிடந்த அந்நாளைய சென்னை மக்கட்கு, சென்னையிலிருந்த அரசாங்கமே முதலும் முடிவும்

எல்லாமுமாயிருந்தது. அவர்களுக்கும் சென்னையி லிருந்த கும்பினி ஆட்சி இங்கிலாந்திலிருந்த ஓர் ஆட்சிக் குழுவிற்குக் கட்டுப்பட்டதென்பதும், அக்குழுவிற்குத் தங்கள் குறைகளைத் தெரிவித்து நிறைவுபெறலாம் என்பதும் அறவே தெரியாத உண்மைகள். மக்களின் இத்தகைய பெருத்த அறியாமைக்கு விதி விலக்காய் விளங்கிய பேரறி வாளர், லட்சுமி நரசிம்முலு செட்டியார். அவர், 'சென்னைச் சுதேசிய சபை'[8] என்ற ஒன்றை நிறுவி னார்; அதன் தலைவரும் ஆனார். அச்சபை வாயிலாக நாட்டு மக்களின் குறைகளை எல்லாம் அவ்வப்போது வெளிப்படுத்தி, சட்ட வாயிலாகக் குறைகளை நீக்கப் போராட ஆரம்பித்தார். பெருஞ்செல்வர்களும், மதிப்பு வாய்ந்த பெரியோர்களும், உத்தியோகப் பற்றற்ற பெருமக்களும் சுதேசி சபையின் உறுப் பினர்கள் ஆனார்கள். அந்நாளில் அவர்கள் ஆற் றிய பணி மிகச் சிறந்த பயன் விளைத்தது. அடிக்கடி கூட்டங்கள் கூட்டப்பெற்றன. அக்கூட்டங்களில் மக்களின் குறைகள் ஆராயப்பட்டன. அக்குறை களைப் போக்குமாறு இங்கிலாந்திலிருந்த மேலிட ஆட்சிக்கு விண்ணப்பங்கள் அனுப்பப்பெற்றன.

லட்சுமி நரசிம்முலு செட்டியார் முதன்முதலாக ஐரோப்பியப் பாதிரிமார்களின் கூட்டத்தோடேயே கடும்போர் புரிய நேர்ந்தது. அப்போரை அவர் அரசியல் போராகவும், கலாசாரப் போராகவுமே கருதினார். அந்நாளில் இந்தியாவுக்கு வந்த பாதிரி மார்கள் முதன்முதலில் கல்வி ஒளி பரப்புவதற் கென்றே வந்தனர் என்று கூறப்பட்டது. ஆனால், மிகக் குறுகிய காலத்திலேயே அவர்கள் சமயப் பிரசாரகர்களாக, மக்களை மதம் மாற்றுவோர்களாக

மாறினார்கள். கல்வியைப் பரப்புவதெல்லாம் மதம் மாற்றும் பணிக்கு அடுத்த நிலையிலேயே அவர்களால் மதிக்கப்பட்டது. கும்பெனியார் இந்நாட்டை ஆண்ட அந்நாளில், அரசாங்க மொழியாக ஆங்கிலம் தலை விரித்தாடியது. அது காரணமாக வயிறு வளர்த்து வாழ்க்கையை வளம்படுத்த அரசாங்கப் பணிகளை ஏற்க விரும்புவோர்களுக்கு ஆங்கிலமொழி கட்டாயப் படிப்பாயிற்று. ஆம்; இன்று இந்தி எந்த நிலையைப் பெறவேண்டுமென்று டில்லி ஆட்சியாளர் வற்புறுத்துகின்றனரோ, அந்த நிலை அன்று ஆங்கிலத்திற்கிருந்தது. அதன் விளைவாக நாட்டு மக்கள் தங்கள் குழந்தைகட்கு ஆங்கில மொழியைக் கட்டாயமாகப் பயிற்றுவிக்க வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது. எனவே, பள்ளிப் பிள்ளைகள் எல்லோரும் பாதிரிமார்களிடம் கல்வி கற்கும் குழந்தைகளானார்கள். அவ்வாறு தம்பால் கல்வி கற்க வந்த குழந்தைகளுள் எளியவரை—வறியவரை எல்லாம் கிறிஸ்தவ மதத்தில் சேர்த்தார்கள் பாதிரிமார்கள். பச்சைப் பாலகர்களாயிற்றே என்ற எண்ணம் அவர்களுக்குச் சிறிதும் இல்லை. நாட்டின் நிருவாகத்தை நடுவு நிலைமையோடு நடத்த வேண்டிய பொறுப்பிலிருந்த ஆங்கில மேலதிகாரிகள், இந்த மதம் மாற்றும் வேலையை ஒரு சிறிதும் கண்டிக்க முன் வரவில்லை; அதற்கு மாறாக, மறைமுகமாகக் கண் அடித்தும், நேர்முகமாக ஊக்கியும் மதம் மாற்றும் வேலைக்கு அரசாங்க ஆதரவையும் அளித்தார்கள். அப்போது திருநெல்வேலிக் கலெக்டராயிருந்த தாமஸ்[9] என்பவர், வெளிப்படையாகவே பாதிரிமார்களுடன் ஒத்துழைத்து, அந்த மாவட்டத்து மக்களைக் கிறிஸ்தவ மதத்தில் சேர்க்கும்

பணியில் ஈடுபட்டார். சென்னையிலிருந்த சர். வில்லியம் பர்ட்டன்[10] என்ற நீதி மன்றத் தலைவரும் வெளிப்படையாகவே பாதிரிமார்கள்பால் பரிவு காட்டினார். வாய்ப்புக் கிடைத்தபோதெல்லாம் நீதிபதி இருக்கையிலிருந்துகொண்டே கிறிஸ்தவ மத உபதேசங்களை நீதி மன்றத்திலிருந்து இந்துக்களுக்கு வழங்கினார். திருநெல்வேலிக் கலெக்டர் தாமஸுக்கு உறவினரும், சென்னை அரசாங்கத் தலைமைச் செயலாளராய் இருந்தவருமாகிய இன்னொரு தாமஸ்,[11] அரசாங்கத்தில் இந்துக்களைப் புறக்கணித்துவிட்டு, கிறிஸ்தவர்களுக்கே பணிகளை வழங்கினார். செங்கற்பட்டு மாவட்ட நீதிபதியாய் இருந்த மோர்ஹெட்[12] என்ற ஒருவர், ஒரு நாள் தம்முடைய நீதி மன்ற நடவடிக்கைகளை எல்லாம் நிறுத்திவிட்டு, எங்கிருந்தோ வந்த ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் மதப் பிரசாரம் செய்வதற்குத் தம் நீதி மன்ற மண்டபத்தைக் கொடுத்து உதவினார். சுருங்கச் சொன்னால், சென்னை அரசாங்கமே ஓர வஞ்சகமாய் நடந்துகொண்டது எனலாம்; மதச் சார்புடைய தங்கள் முறையற்ற வேண்டுகோள்கட்கு இணங்காமையால், சென்னையிலிருந்த நீதி மன்றத் தலைவரையே வேலையினின்றும் நீக்கத் துணிந்தது. அந்நாளில்[13] லீவின் என்பார் ஒரு முறை தம் இந்து நண்பர்கள் தமக்களித்த வாழ்த்துரைக்குப் பதிலளித்தபோது கூறியுள்ள வாசகங்கள், அக்கால நிலையை நமக்குக் கண்ணெதிரே கொண்டுவந்து காட்டும். அப்பெரியார் பின் வருமாறு பேசியுள்ளார்:

'சென்னை அரசாங்கம் தனது முறையற்ற கட்டளைகளை நீதிபதிகளின்மேல் சுமத்தி, அறத்திற்குப் பழுதூட்டச் செய்யும் முயற்சிக்கு எதிர்ப்பில்லா

மல் போகுமானால், அரசாங்கம் அடுத்தபடியாக எவ்வித ஒளிவும் மறைவுமின்றி இந்துக்களைக் கிறிஸ்தவராக்கும் முயற்சியில் தீவிரமாக ஈடுபட்டே தீரும். இங்கிலாந்து அரசியார் மத மாற்றத்தில் தமக்கு நாட்டமில்லை என்றும், நடுவு நிலையோடு அரசாங்கம் நடந்துகொள்ளும் என்றும் தெளிவுபடுத்தியுள்ளார் என்பது உண்மையே. ஆனால், நடைமுறையில் பார்க்கும்போது மத மாற்றத்தில் ஈடுபடுவதில் மிகுந்த பற்றுள்ளத்தோடு அரசியலார் செயற்பட்டுள்ளனர் என்பது தெள்ளத் தெளிவாய் விளங்குகிறது. அரசாங்கத்தின் முறையற்ற ஆணைகளை நீதிபதிகளே எதிர்த்துள்ளார்கள். ஆனால், அத்தகைய எதிர்ப்புகளை அரசாங்கம் எதிர்பார்த்தே முறை கெட்ட ஆணைகளைப் பிறப்பித்துள்ளது. நீதிக்குப் பழுதூட்டும் வகையில் பிறப்பிக்கப்படும் எல்லா ஆணைகளையும் எதிர்த்து நீதி மன்றத்தின் நடுவு நிலையைக் காப்பாற்றுவேன் என்று பன்முறையும் முழங்கிய ஒரு நீதிபதியை வீட்டுக்கு அனுப்பியே தீருவது என்ற முடிவின் விளைவே அரசாங்கத்தின் இந்த முறை கேடான ஆணைகள்.'

இவ்வாறு அரசாங்கத்தின் வெளிப்படையான பலம் பொருந்திய ஆதரவைப் பெற்றுப் பாதிரிமார்கள் செய்து வந்த அந்தச் செயல்களைக் கண்டு, இந்து சமுதாயமே ஆத்திரமடைந்தது. லட்சுமி நரசிம்முலு செட்டியார் மக்களின் ஆத்திரத்தை வெளிப்படுத்தும் கருவியாய் விளங்கித் தம்மால் இயன்ற அரும்பணிகளை எல்லாம் ஆற்றத் துணிந்தார். அந்தச் சந்தர்ப்பத்தில் 'நேட்டிவ் சர்குலேட்டர்'[14] என்ற ஒரு செய்தித்தாள் நாராயணசாமி நாயுடு என்பவரால் நடத்தப்பெற்று வந்தது. அந்தச்

செய்தித் தாளின் பெயரை 'இளம்பிறை' என்று பொருள்படும் 'கிரெஸண்ட்'[15] என்று மாற்றினார். இராணுவத்தில் வேலை பார்த்து அனுபவம் பெற்ற ஹார்லி [16] என்ற ஒருவரைச் செய்தித் தாளின் ஆசிரியராக அமர்த்தினார். ஹார்லி உறுதியான கொள்கைகளையுடையவர். அதன் பயனைக் கண்டது அவர் நடத்திய செய்தித் தாளும். 'கிரெஸண்ட்' செய்தித் தாளின் முதல் இதழ் 1844-ஆம் ஆண்டு, அக்டோபர்த் திங்கள், இரண்டாம் நாள் பிறந்தது. (காந்தி அடிகள் பிறப்பதற்குச் சரியாகக் கால் நூற்றாண்டுக்கு—இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்பு) 'புரட்சியின் தாயக'மாகிய தமிழகத்தில் எழுந்தது இம்முயற்சி. காந்தி அடிகள் பிறந்த நாள் 1869-ஆம் ஆண்டு, அக்டோபர்த்திங்கள், 2-ஆம் நாள். ஹிந்துக்களின் துன்பங்களைத் துடைப்பது அச்செய்தித் தாளின் குறிக்கோளென அறிவிக்கப்பெற்றது. லட்சுமி நரசிம்முலு கிரெஸண்ட் தாளை நடத்திய காலத்தில் 'ரிகார்ட்' [17] என்ற பெயரால் பாதிரிமார்களால் ஓர் இதழ் நடத்தப்பட்டு வந்தது. இந்தப் பாதிரிமார் இதழுக்கு எதிராக எழுந்ததே 'கிரெஸண்ட்'. பாதிரிமார்கள் அந்நாளில் மேற்கொண்ட தவறுகளையும் குற்றங்களையும் அம்பலப்படுத்தும் பணியில் ஹார்லியை ஆசிரியராகக் கொண்ட கிரெஸண்ட் முழு மூச்சுடன் இறங்கியது. அதனால், ஆரம்பத்தில் கிரெஸண்டுக்குக் கெட்ட பெயரே ஏற்பட்டது. ஆனால், எதிர்ப்புகளையும் இடையூறுகளையும் சமாளித்துக்கொண்டு கிரெஸணட் முன்னேறியது. நீதிபதிகளும் அரசாங்க அதிகாரிகளும் 'கிரெஸண்ட்' தாளின் கண்டனங்களைத் தாங்க முடியாமல் தவித்தார்கள். அதுவரை

பாதிரிமார்களுக்கு வெளிப்படையாக அவர்கள் காட்டிய பரிவை அதற்குப்பின் மறைமுகமாகக் காட்டத் தொடங்கினார்கள். மக்கள் கண்ணில் தாங்கள் ஒன்றும் அறியாத அப்பாவிகள் போல நடித்தார்கள். அரசாங்கம் 'கிரெஸண்ட்' தாளின்மேல் கடுங்கோபம் கொண்டு பிற செய்தித் தாள்களுக்கு வழங்கிய சிறு சலுகைகளையும் வழங்க மறுத்தது; பல வகைகளிலும் புறக்கணிப்பையும் துன்பத்தையும் கொடுத்தது.

இங்கிலையில் அரசாங்க அதிகாரிகள் கிறிஸ்தவ மதத்திற்கு மாறியவர்களின் சொத்துரிமை கேடுறு வகையில் புதியதொரு சட்டம் கொண்டுவரத் திட்டமிட்டார்கள். அச்சட்டம் மதம் மாறுவோர்க்குப் பெருத்த ஆதரவளிக்கும் நோக்கமுடையதாய் இருந்தது. அதைக் கண்டு இந்து மக்கள் ஆற்ருெணுக் கோபங்கொண்டார்கள். 1845-ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள், 9-ஆம் நாள் லட்சுமி நரசிம்முலு சென்னையின் குடிமக்களைக் கொண்டதொரு பெருங் கூட்டத்தைக் கூட்டினர். ஏராளமான மக்கள் அக் கூட்டத்திற்கு வந்து அரசாங்க அதிகாரிகளால் கொண்டுவரப்பட இருந்த சட்டத்தை எதிர்த்து ஒரு மனமாகத் தீர்மானம் செய்தார்கள்; அத்தீர்மானத்தை இங்கிலாந்திற்கு அனுப்பி வைத்தார்கள். மக்களின் தீர்மானத்தை ஆங்கில நாட்டின் மேலிட அரசியலார் கண்டு ஆழ்ந்த கவனம் செலுத்தினர். அதன் பயனாக, கொண்டுவரப்பட இருந்த சட்டத்தில் தீங்கு பயப்பனவாய் இருந்த பகுதிகள் உடனடியாக நீக்கப்பட்டன.

எதிர்பார்த்தவாறு தங்கள் முயற்சியில் வெற்றி பெற முடியாமல் போனதும், பாதிரிமார்கள்

சென்னைப் பல்கலைக் கழகத்தின்மேல் தங்கள் கருத்தைச் செலுத்தினார்கள். சென்னைப் பல்கலைக் கழகம் அந்நாளில் சமய பேதங்களுக்கப்பாற்பட்டு, இந்திய இளைஞர்கட்கு ஆங்கிலக் கல்வியைப் புகட்டி வந்தது. அங்கிலையில் ஆண்டுதோறும் பல்கலைக் கழக மாணவர்களின் தகுதிகளை ஆராய நியமிக்கப்பட்ட பாதிரிமார்களும் அவர்கள் நண்பர்களும் மாணவர்களைக் கிறிஸ்தவ சமயக் கோட்பாடு பற்றிய கேள்விகளைக் கேட்டுத் திணறடித்தர்கள். நாட்டு மக்கள் இந்தக் குறைபாட்டைப் பற்றிக் கூக்குரலிட்டபோது பாதிரிமார்கள், 'கட்டாயமாகப் பைபிளைப் படியுங்கள்; அதுவே வாழ வழி,' என்றார்கள்.

இக்கொடுமையைக் கண்ட லட்சுமி நரசிம்முலு 1846-ஆம் ஆண்டு, அக்டோபர் 7-ஆம் நாள் பச்சையப்பர் கல்லூரிக் கட்டடத்தில் இந்து மக்களின் மாபெருங் கூட்டமொன்றைக் கூட்டினார். அக் கூட்டத்தில் இங்கிலாந்து அரசாங்கம் இந்து மக்களின் மத விஷயத்தில் நடுநிலைமை காட்டுவதாகக் கொடுத்த வாக்குறுதியைச் சுட்டிக் காட்டியும், நடைமுறையில் அவ்வாக்குறுதி முறியடிக்கப்படுவதை எடுத்துக் காட்டியும், பாதிரிமார்களின் மதமாற்றத் திட்டத்திற்கு அரசாங்க அதிகாரிகள் ஆதரவு அளிப்பதை எண்பித்தும், கவர்னர் மாகாணத்தின் உட்பகுதிகளில் ஆங்கிலக் கல்வியைப் பரப்புவதில் தயக்கம் காட்டுவதைப் புலப்படுத்தியும், அரசாங்க அலுவலகங்களில் நாட்டு மக்களுக்கு வேலை கொடுக்கப்படாத வேதனையை வெளிப்படுத்தியும், பாதிரிமார்களால் இந்து இளைஞர்கள் போட்டித் தேர்வுகளில் வெற்றி பெறாமல் தடை செய்யப்படுவதற்குச் சான்றுகள் தந்தும், நீதி மன்றங்கள் பாதிரிமார்

சென்னைப் பல்கலைக் கழகத்தின்மேல் தங்கள் கருத்தைச் செலுத்தினார்கள். சென்னைப் பல்கலைக் கழகம் அந்நாளில் சமய பேதங்களுக்கப்பாற்பட்டு, இந்திய இளைஞர்கட்கு ஆங்கிலக் கல்வியைப் புகட்டி வந்தது. அங்கிலையில் ஆண்டுதோறும் பல்கலைக் கழக மாணவர்களின் தகுதிகளை ஆராய நியமிக்கப்பட்ட பாதிரிமார்களும் அவர்கள் நண்பர்களும் மாணவர்களைக் கிறிஸ்தவ சமயக் கோட்பாடு பற்றிய கேள்விகளைக் கேட்டுத் திணறடித்தார்கள். நாட்டு மக்கள் இந்தக் குறைபாட்டைப் பற்றிக் கூக்குரலிட்டபோது பாதிரிமார்கள், 'கட்டாயமாகப் பைபிளைப் படியுங்கள்; அதுவே வாழ வழி,' என்றார்கள்.

இக்கொடுமையைக் கண்ட லட்சுமி நரசிம்முலு 1846-ஆம் ஆண்டு, அக்டோபர் 7-ஆம் நாள் பச்சையப்பர் கல்லூரிக் கட்டடத்தில் இந்து மக்களின் மாபெருங் கூட்டமொன்றைக் கூட்டினார். அக்கூட்டத்தில் இங்கிலாந்து அரசாங்கம் இந்து மக்களின் மத விஷயத்தில் நடுநிலைமை காட்டுவதாகக் கொடுத்த வாக்குறுதியைச் சுட்டிக் காட்டியும், நடைமுறையில் அவ்வாக்குறுதி முறியடிக்கப்படுவதை எடுத்துக் காட்டியும், பாதிரிமார்களின் மதமாற்றத் திட்டத்திற்கு அரசாங்க அதிகாரிகள் ஆதரவு அளிப்பதை எண்பித்தும், கவர்னர் மாகாணத்தின் உட்பகுதிகளில் ஆங்கிலக் கல்வியைப் பரப்புவதில் தயக்கம் காட்டுவதைப் புலப்படுத்தியும், அரசாங்க அலுவலகங்களில் நாட்டு மக்களுக்கு வேலை கொடுக்கப்படாத வேதனையை வெளிப்படுத்தியும், பாதிரிமார்களால் இந்து இளைஞர்கள் போட்டித் தேர்வுகளில் வெற்றி பெறுமல் தடை செய்யப்படுவதற்குச் சான்றுகள் தந்தும், நீதி மன்றங்கள் பாதிரிமார்

தம் அதிகார எல்லையையும் மீறி, திரு. லட்சுமி நரசிம்முலு உருவாக்கிய விண்ணப்பத்தில் எவரையும் கையொப்பமிடாதவாறு காவல் புரியத் தொடங்கினார். ஆனால், என்ன வியப்பு-அதுவும் அந்த நாளில்-சென்னையில்மட்டும் இருந்த பெருங்குடி மக்கள் 12000 பேர் திரு. லட்சுமி நரசிம்முலுவின் கட்டளைக்கும் தங்கள் மனச்சாட்சிக்கும் பணிந்து விண்ணப்பத்தில் கையொப்பமிட்டார்கள்.

12000 பேர்கட்குமேல் கையொப்பமிட்டு உருவாக்கப்பெற்ற விண்ணப்பம் இங்கிலாந்திற்குச் சென்றது. அந்த விண்ணப்பத்தின் வேகத்தைக் குறைக்க, சென்னையிலிருந்த கம்பெனியின் கையாட்கள் எவ்வளவோ உத்திகளை எல்லாம் கையாண்டனர். ஆனால், கால தாமதமாயினும் திரு. லட்சுமி நரசிம்முலுவின் முயற்சி கருதிய பயனைக் கொடுக்கவே செய்தது.

அரசாங்கப் பள்ளிக்கூடங்களில் பைபிளைப் புகுத்தும் முயற்சி மீண்டும் 1853-ஆம் ஆண்டு தலை தூக்கியது. அந்தச் சமயத்தில் அதை எதிர்த்துப் போர்க்கொடி உயர்த்திய திரு. லட்சுமி நரசிம்முலுவுக்குப் பெருந்துணையாய் விளங்கியவர்கள் தமிழ் இனம் கல்வி ஒளி பெறுவதற்குச் சிறந்த துணைவராய் விளங்கியவரும், பச்சையப்பர் அறநிலையத்தை உருவாக்கிய இரு பெருஞ் சான்றோராகிய ஜியார்ஜ் நார்ட்டனும், ஜான் புரூஸ் நார்ட்டனும் ஆவர்.[18] இம்மூவர் முயற்சியும் வென்றது.

1852-ஆம் ஆண்டில் டான்பி சைமூர் [19] என்ற இங்கிலாந்து பாராளுமன்றத்தின் உறுப்பினர் இந்தியாவைக் கண்டு களிக்க வந்தார். அந்தச் சமயத்தில்

சென்னை மாநகரினின்றும் அவ்வப்போது ஏராள மான குடிமக்களின் கையொப்பங்கள் பெற்று அனுப்பப்பெற்ற விண்ணப்பங்கள் வாயிலாகத் திரு. லட்சுமி நரசிம்முலுவின் பெயர் இங்கிலாந்து நாட்டுப் பாராளுமன்ற உறுப்பினர் பலருக்கும் தெரிந்த பெயராகவே இருந்தது. சென்னைத் துறை முகத்தில் கால் வைத்தவுடனே பாராளுமன்ற உறுப் பினர் சைமூர், திரு. லட்சுமி நரசிம்முலுவைப்பற்றியே விசாரித்தார். லட்சுமி நரசிம்முலு நேரில் அறிமுகப் படுத்தப்பட்டதும் இருவரும் இணைபிரியா நண்பர் ஆயினர். சைமூர், லட்சுமி நரசிம்முலுவின் விருந்தின ராகவே சென்னையிலிருந்தார். அதன் பயனாக நாட்டு மக்களின் குறைகளை எல்லாம் பாராளுமன்ற உறுப்பினருக்குத் தெளிவாகவும் விரிவாகவும் எடுத்துச் சொல்லும் வாய்ப்பு லட்சுமி நரசிம்முலுவுக் குக் கிடைத்தது. பிரிட்டிஷ் ஆட்சியின் பல்வேறு குறைகளையும் லட்சுமி நரசிம்முலு பயமின்றி எடுத் துக் காட்டினார்; இந்து மக்களின் அரசியல்—சமய— உரிமைகள் மறுக்கப்படுவதை எல்லாம் சுட்டிக் காட்டினார்; அரசாங்க அதிகாரிகளின் முறையற்ற ஆட்சியினைச் சான்றுகள் காட்டி விளக்கினார். லட்சுமி நரசிம்முலுவின் கள்ளமற்ற உள்ளத்தி லிருந்து குமுறி வந்த குறைகளை எல்லாம் கேட்ட சைமூர், அவரை அழைத்துக்கொண்டே தமிழகத் தைச் சுற்றிப் பார்வையிடப் புறப்பட்டார். இருவரும் கடலூர், குடந்தை, கோவை முதலான இடங்கட்கு நேரில் சென்று, மக்களின் துயரைக் கண்கூடாகக் கண்டனர். நிலவுடைமையாளர்கள் தாங்க முடியாத வரிச் சுமையின்கீழ் தவிப்பதையும், வரி செலுத்தா தோர் அரசாங்க அதிகாரிகளால் காட்டுமிராண்டித்

தனமாகத் தண்டிக்கப்படுவதையும் சைமூர் கண்ணெதிரே கண்டார். தாசில்தார் அலுவலகத்திற்கு முன்பு வரி செலுத்த முடியாத வறியவர்கள், பொசுக்கும் வெயிலில் பெரும்பாறைகளைச் சுமந்துகொண்டு நிற்க வைக்கப்பெற்றிருப்பதைச் சைமூர் கண்டார். இன்னும் சில இடங்களில் தாலூக்கா அலுவலகத்திற்கு முன்பு வரி செலுத்த முடியாத உழவர்கள் தீய்க்கும் வெயிலில் தங்கள் கால் கட்டை விரல்களைத் தலையால் தொடும்படி வில்போல வளைத்து நிறுத்தி வதைக்கப்படுவதையும் அதைக் கண்டும் காணாமலும் தாசில்தார் காகிதங்களைக் கட்டிக்கொண்டு அழுவதையும் சைமூர் நேரில் கண்டார். தமிழகத்தில் தாம் நேரில் கண்டதையும் கேட்டதையும் ஒன்று விடாமல் குறிப்பெடுத்துக்கொண்டார் சைமூர்; என்னென்ன கருவிகளைக்கொண்டு ஏழை உழவர்களைக் கிழக்கிந்தியக்கம்பெனி[20] வாட்டிவதைத்ததோ, அந்தக் கருவிகள், கற்களை எல்லாம் ஒரு பெரு மூட்டையாகக் கட்டிக்கொண்டார். அனைத்தையும் எடுத்துக்கொண்டு அடக்க முடியா ஆத்திரத்துடன் தாயகம் திரும்பினார் சைமூர்.

1854-ஆம் ஆண்டு, ஜூலை மாதம், பாராளுமன்றக் கூட்டத்தில் சைமூர் தமிழகத்தில் மக்கள் படும் அவதியைப்பற்றித் தாம் நேரில் கண்டும் கேட்டும் அறிந்த செய்திகளை எல்லாம் எடுத்துச் சொன்னார்; குற்றவாளிகள் மட்டுமல்லாமல் வரி கட்ட முடியாத உழவரும் எவ்வளவு கொடுமைகளுக்கு இரையாக்கப்பட்டனர் என்ற செய்திகளைக் கேட்பவர் நடுங்க எடுத்துரைத்தார். அச்சந்தர்ப்பத்தில் சைமூரின் ஆவேச முழக்கத்தைக் கண்டு அஞ்சிய ஏகாதிபத்தியத்தின் சீடர்கள், எதிர்த்து ஆரவாரம் புரிந்தார்

கள். ஆனால், இந்திய ஆட்சிக் கழகத்தின் தலைவர் சர். ஊட்டு[21] என்பவர் உடனே ஆய்வுக் குழு ஒன்று அமைத்துக் கண்டிப்பான ஆராய்ச்சியை நடத்தும் படி கட்டளை பிறப்பித்தார். சைமூரின் சொற்பொழிவை ஒட்டிப் பாராளு மன்றத்தில் நடந்த சொற்போரின் விவரங்கள் இந்திய அரசாங்கத்திற்கு அனுப்பப்பெற்றன. இரண்டே மாதங்களில் ஆராய்ச்சிக் குழு இந்தியா வந்து இறங்கியது. ஏராளமான சாட்சியங்கள் விசாரிக்கப்பட்டன. இதற்கிடையில் சைமூரைச் சிறி எழச்செய்த லட்சுமி நரசிம்முலு, நாட்டில் நடக்கும் கொடுமைகளைப்பற்றி மீண்டும் ஒரு பெருவிண்ணப்பம் தயாரித்து, ஏராளமான மக்களைக் கையொப்பமிடச் செய்து, மறுபடியும் இங்கிலாந்து பாராளுமன்றத்திற்கு அனுப்பி வைத்தார்.[22] ஆலபிமார்லி பிரபு அதை 1856-ஆம் ஆண்டு, ஏப்பிரல் திங்கள் 14-ஆம் நாள் பிரபுக்கள் சபையின் ஆராய்ச்சிக்கு உரிமைப்படுத்தினர். ஏறத்தாழ இதே சந்தர்ப்பத்தில் இந்தியா வந்த ஆராய்ச்சிக் குழுவும் தன் அறிக்கையைப் பாராளு மன்றத்திற்கு அனுப்பியது. எல்லாவற்றையும் ஆராய்ந்து பார்த்த பாராளுமன்றம், ஏழை மக்கள் பால் கிழக்கிந்தியக் கம்பெனி நடந்துகொண்ட முறைகேடான செயல்களையும் கொடுங்கோலாட்சியையும் வன்மையாகக் கண்டித்து, ஆணைகள் பிறப்பித்தது.

இதற்கிடையில் 1852ல் சென்னைச் சுதேசிச் சங்கம் லட்சுமி நரசிம்முலு காட்டிய வழியில் ஒரு விரிவான சுவை நிறைந்த விண்ணப்பத்தைத் தயாரித்தது. அதில் தென்னக மக்கள் கிழக்கிந்தியக் கம்பெனியின் கொடுங்கோலாட்சிக்கு இரையாகிப் படும் அவதிகளெல்லாம் விளக்கப்பெற்றிருந்தன.

மேலும், அந்த விண்ணப்பத்தில் தாள முடியாத வரிச்சுமை பற்றியும், வரி வசூலிப்பதில் காட்டப்படும் கொடுமைகள் பற்றியும், நீதிக்காக மக்கள் செல வழிக்க வேண்டியிருந்த பெருந்தொகை பற்றியும், நாட்டில் நல்ல பாதைகளும் ஏரி குளங்களும் இல் லாத அவலம் பற்றியும், கல்வி அறிவு பெற மக்க ளுக்குப் போதிய வாய்ப்புகள் இல்லாத் துயரங்கள் பற்றியும் குறிப்பிடப் பெற்றிருந்தன. அனைத்திற் கும் மேலாக, இந்தியா எந்த முறையில் ஆளப் பெற் றாலும் அந்த முறையை அவ்வப்போது இங்கிலாந்து பாராளுமன்றம ஆய்வுக் குழுக்களை ஏற்படுத்தி வெளிப்படையாக விசாரணை செய்து ஆராயவேண்டு மென்றும், அப்போதுதான் மக்களுக்குத் தங்கள் குறைகளை மேலிடத்திற்கு எடுத்துக்காட்ட இயலும் என்றும், அது வாயிலாகத்தான் நாட்டில் நல் லாட்சி—குடிகளின் பழிக்கஞ்சி நடக்கும் ஆட்சி— ஏற்படும் என்றும் வற்புறுத்தப் பெற்றது. லட்சுமி நரசிம்முலு காட்டிய வழியில் சென்னைச் சுதேசிச் சங் கம் உருவாக்கிய இந்த விண்ணப்பம், எலன்புரோ பிரபுவால்[23] 1853-ஆம் ஆண்டு,பிப்பிரவரித் திங்கள், 25-ஆம் நாள் பிரபுக்கள் சபையின் முன் வைக்கப் பட்டது.

அதே ஆண்டு பிரபுக்கள் சபையில் ஆல்பி மார்லி பிரபு மான்செஸ்டர் நகரத்துக் குடி மக்கள் சார்பில் ஒரு மனுவைப் பிரபுக்கள் சபை முன்பு வைத்துச் சொற்பொழிவாற்றினார். அந்த மனுவில் அந்நகர மக்கள் இந்தியாவை ஆட்சி புரிய ஓர் அமைச்சரும் ஆலோசனைக் குழுவும் இங்கிலாந்தில் நியமிக்கப்பட வேண்டுமென்றும், அந்த அமைச்ச ரும் ஆலோசனைக் குழுவும் இங்கிலாந்து நாட்டுப்

பாராளுமன்றத்தின் ஆட்சிக்குக் கட்டுப்பட வேண்டு மென்றும் வேண்டியிருந்தனர். அந்த விண்ணப் பத்தை அவையின் முன் வைத்து, ஆல்பி மார்லி பிரபு பேசும்பொழுது, தம்மிடத்தில் இரு சென்னை வாசிகள் எழுதிய கடிதங்கள் இருப்பதாக எடுத் துரைத்தார். அக்கடிதங்களை எழுதியவர்கள் சிறந்த கல்வியறிவு பெற்றவர்களென்றும் தங்கள் உள்ளத் தில் தோன்றிய உண்மையான கருத்துக்களைப் பிர புக்கள் சபையில் உள்ள எந்த ஓர் ஆங்கிலேயருக் கும் சற்றும் இளைக்காத வகையில் குற்றமற்ற ஆங்கி லத்தில் வெளியிடும் ஆற்றலுடையவர்களென்றும் குறிப்பிட்டார். மேலும் பேசுகையில், அவர் தம் மிடமுள்ள அவ்விரு கடிதங்களில் முதன்மையானது சென்னையிலிருந்து லட்சுமி நரசிம்முலு செட்டியார் விடுத்த கடிதம் என்றும், 1853-ஆம் ஆண்டு, ஜனவரி மாதம், 23-ஆம் தேதி எழுதியிருந்த அக்கடிதத்தில், "இந்திய மக்கள் சார்பில் கூறப்பட்டுள்ள புகார்களை ஆராய ஓர் ஆராய்ச்சிக் குழு அமைக்கப்படுமானால், நிச்சயமாக அந்தப் புகார்களின் உண்மையை எடுத்து நிலைநாட்ட முடியும். நாங்கள் கொடுத் துள்ள புகார்களில் ஒரு சிறிதும் கற்பனை கலவாத வண்ணம் எச்சரிக்கையாக இருந்திருக்கிறோம். ஆனால், நாங்கள் சொல்லியுள்ள அளவிற்குக் குறை பாடுகள் அஞ்சத்தக்கனதான். ஓர் ஆராய்ச்சிக் குழு நியமிக்கப்படுமானால், நாங்கள் சொல்லியுள் ளவை யாவும் உண்மை என்பது புலப்படும்," என்று எழுதப்பெற்றிருப்பதைக் குறிப்பிட்டார். இவ் வாறு பேனாவின் வலி கொண்டு பிரபுக்கள் சபை யிலும் மக்கள் சபையிலும் அறப்போர் நடைபெறத் தம் ஆற்றலைப் பயன் படுத்திய லட்சுமி நரசிம்முலு

வின் நீண்ட மனு, இங்கிலாந்து நாட்டின் நல்லறிஞர்களின் கருத்தையெல்லாம் கவர்ந்தது. அதனாலே தான் அதே ஆண்டில் மக்கள் சபையில் பேசிய அறிஞர் ஜான் பிரைட்டு[24] என்பவர், லட்சுமி நரசிம்முலுவின் மனுவைக் குறிப்பிட்டே சொற்பொழிவாற்றினார். "லட்சுமி நரசிம்முலுவின் மனு மிக நீண்ட ஒன்று; மிகத் திறமையாக வரையப்பட்டதுங்கூட. அவருடைய விண்ணப்பத்தில் கண்ட பல குறைகளை உண்மையென்று நிறுவ வல்ல வேறு பல கடிதங்களும் எனக்குச் சென்னையினின்றும் கிடைத்துள்ளன. அவையனைத்தும் ஓர் ஆராய்ச்சிக் குழு அமைக்கப்பெற்றால், கூறப்பட்டுள்ள புகார்களுள் ஒவ்வொன்றையும் நிறுவிக்காட்டமுடியுமென உறுதி கூறுகின்றன," என்பது அவர் கூற்று.

இவ்வாறு தம் நண்பர் பலரோடும் சேர்ந்து லட்சுமி நரசிம்முலு நடத்திய அறப்போர், பல்லாண்டுகள் தொடர்ந்து நடைபெற்றது. மீண்டும் 1853-ஆம் ஆண்டில் பதினான்காயிரம் பேர் கையொப்பமிட்ட ஒரு விண்ணப்பத்தை லட்சுமி நரசிம்முலு இங்கிலாந்து அரசியலாருக்கு அனுப்பி வைத்தார். அந்த மனுவில் உடனடியாகக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியிலிருந்து இந்தியாவை விடுதலை செய்து, இங்கிலாந்து தேசத்தின் நேரடி நிருவாகத்தின் கீழ் இந்திய அரசியலைக் கொண்டு வரவேண்டும் என்று வற்புறுத்தியிருந்தார். என்னே அவருடைய வருமுன் செயலாற்றும் அறிவு! விரல் விட்டு எண்ணக்கூடிய வியாபாரிகளின் கையிற்சிக்கி நாடு அல்லல்படும் அவமானத்தை நீக்கி, இங்கிலாந்து அரசாங்கத்தின் நேரடி நிருவாகத்தின்கீழ் இந்தியாவைக் கொண்டு வருவது

வாயிலாக நாட்டின் விடுதலையை விரைவுபடுத்த முடியுமென்று லட்சுமி நரசிம்முலு நம்பியிருக்க வேண்டும். ஆம். அவர் நம்பிக்கை வீண் போகவும் இல்லை. இங்கிலாந்து மேலிட அரசின் நேரடி நிருவாகத்தில் இந்தியா வருவதென்பதற்கு இங்கிலாந்து மக்கள் சபையின் பொறுப்பில் இந்தியாவருவதென்பதே பொருள். அங்கிலேயில் உலகப் பாராளுமன்றங்களின் தாயாய் விளங்கும் இங்கிலாந்துப் பாராளு மன்றம், என்றேனும் ஒரு நாள் பாரத நாட்டிற்கு விடுதலை தந்தே தீருமென்று தேச பக்தர் லட்சுமி நரசிம்முலு வருங்கால அறிவோடு கனவு கண்டார் போலும்! ஆம்! இற்றைக்குச் சரியாக 103 ஆண்டுகட்கு முன் தமிழகத்தின் தலை நகரில் வாழ்ந்த ஒரு பெருமகனுர்—ஒரு பெருந்தலைவர்—இப்படிக் கனவு கண்டார் என்று எண்ணும்போதே நமக்கு மெய் சிலிர்க்கிறதல்லவா? ஒரு வகையில் உண்மையைச் சொல்லுமிடத்து 12000-14000 என்று மக்களிடம் கையொப்பம் பெற்று, எழுதுகோலின் துணைகொண்டு நாட்டு விடுதலை இயக்கத்தை நடத்திய நல்லறிஞர் திரு. லட்சுமி நரசிம்முலு, தமிழகத்தின் விடுதலைக்காக முதல் முழக்கம் புரிந்த பூலித் தேவருக்கோ, அவர் அடிச்சுவடுகளைப் பின்பற்றி வீர பாண்டிய கட்டபொம்மன், ஊமைத்துரை, மருது சகோதரர்கள், வேலூர்ச் சிப்பாய்கள் ஆகியோர் நிகழ்த்திய ஆயுதப் போருக்கோ எள்ளளவும் குறையாத மதிப்புடைய அறப்போர் நடத்தினர் என்றே கூறவேண்டும்.

1855-ஆம் ஆண்டு, ஜூலை மாதம், 16-ஆம் தேதி திரு. லட்சுமி நரசிம்முலு 14000 பேருடைய கையொப்பங்களுடன் அனுப்பிய மனுவை ஆல்பி

மார்லி பிரபு, பிரபுக்கள் சபையின் முன் வைத்தார். சென்னையினின்றும் திரு. லட்சுமி நரசிம்முலு நடத்திய அறப்போருக்குத் துணையாகப் பம்பாயி லிருந்தும் கல்கத்தாவிலிருந்தும் பல பெரியோர் மனுக்களை அனுப்பி வைத்தனர். இவையெல்லாம் சேர்ந்து கிழக்கிந்தியக் கம்பெனி இயக்குனர் களின் தொகை முப்பதிலிருந்து பதினெட்டாகக் குறையும்படி செய்தது. அந்தப் பதினெண்மரிலும் ஆறு பேர் இங்கிலாந்து அரச பீடத்தால் நியமனம் செய்யப்பட்டனர். மேலும், நாட்டின் உத்தியோகங் கள் யாவற்றிற்கும் போட்டிகள் வைக்கப்பட்டு, தகுதியானவர்களைத் தேர்ந்தெடுக்கும் முறையும் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது. அதோடு, நீதி மன்றங்களில் இருந்த ஒழுங்கீனங்கள் களையப்பட்டு, உயர்நீதி மன்றத்தின் ஆட்சி எல்லை விரிவாக்கப் பட்டது. இவ்வாறு பல அரிய சீர்திருத்தங்கள் நடைபெறுவதற்கு லட்சுமி நரசிம்முலுவின் அறப் போரே அடிப்படையாய் அமைந்தது. அதோடு நில்லாமல் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்குச் சாவு மணி அடிக்கவும் அண்ணலின் அறப் போர் துணை செய்தது. ஆம். தமிழகத்தில் மக்கள் தலை வர் லட்சுமி நரசிம்முலுவின் தலைமையில் நடந்த அறப்போர்—வடநாட்டில் உள்நாட்டு மன்னர்களின் தலைமையில் 1857-ஆம் ஆண்டு நடைபெற்ற மாபெருங்கருவிப் போர்—இவ்விரண்டும் சேர்ந்தே கிழக்கிந்தியக் கம்பெனியைக் குழி தோண்டிப் புதைத்தன. கும்பெனி ஆட்சியினின்றும் விடுதலை பெற்று, இந்தியத் துணைக் கண்டம் விக்டோரியா பேரரசியின் நேரடி ஆட்சிக்கு உரியதாயிற்று.

19-ஆம் நூற்றாண்டில் தமிழகம் கல்வித் துறை

யில் பல முன்னேற்றங்களைக் கண்டது. சிறப்பாக ஆங்கிலக் கல்வியை முறையாகப் பெறும் பேறு நம்மவர்கட்குக் கிடைத்தது. அக்கல்வியால் தீமைகள் விளைந்தது எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மை நன்மைகள் விளைந்ததும். அவ்வகையில் தமிழகத்தில் கல்வி நெறி தழைத்தோங்க ஒரு நூற்றாண்டிற்கு முன்பு கால்கொண்ட கலைக்கோயில்களுள் தலை சிறந்தது பச்சையப்பர் கல்லூரியே. வாடகைக் கட்டடத்தில் சின்னஞ்சிறு பள்ளியாய்த் தொடங்கிய அது, மிகு விரைவில் ஒரு பெருங் கல்லூரியாவதற்குத் துணை புரிந்த இரு பெரிய ஆங்கில நாட்டுச் சான்றோர் ஜான் புரூஸ் நார்ட்டனும், நார்ட்டனும் ஆவர். தந்தை மகன் உறவு பூண்ட இவர்கள், பச்சையப்பர் அறநிலையம் உருவாவதற்கு மேற்கொண்ட முயற்சிகளை நாம் உன்னுந்தொறும் உன்னுந்தொறும் நம் உள்ளம் உருகும்! பச்சையப்ப வள்ளல் அறப்பணிகட்காகத் தேடித் திரட்டிவைத்த செல்வமெல்லாம் பாழாய்ப்போகாமல் காத்த புண்ணிய சீலர்கள் இவர்களே. இன்று வடவேங்கடம் முதல் தென்குமரிவரை சைவ வைணவக் கோயில்கள் பலவற்றிலும் பச்சையப்பர் அறங்கள் தழைத்து விளங்குகின்றன என்றால்—அந்த அறங்களுக்குப் போக எஞ்சிய தொகையினின்றும் சிறந்த கலைக் கோயில்கள் நடைபெறுகின்றன என்றால்—அதற்குக் காரணம் இருபெரு நார்ட்டன்களின் ஒரு பெருந்தொண்டே.[25]

இத்தகைய பெரும்புகழ் வாய்ந்த ஜான் புரூஸ் நார்ட்டன் 1854-ஆம் ஆண்டிலேயே, இன்றைக்கு 104 ஆண்டுகட்கு முன்பே, லட்சுமி நரசிம்முலு பச்சையப்பர் அறநிலையத்தின் காவலர்களுள்

ஒருவராக அமைய வேண்டுமென்ற தம் ஆவலை எல்லோரும் அறியப் பச்சையப்பர் கல்லூரியின் ஆண்டுவிழாக் கூட்டத்தில் பேசும் பொழுதே வெளியிட்டார்; "நம்மிடையே இன்னும் ஒரு பெரிய மனிதர் நமக்குத் துணை புரிய இருக்கின்றார். அவர் விரைவிலே நம்முடன் சேர்ந்து தொண்டு புரிவா ரென நம்புகின்றேன். சமீப காலமாக அவரைப் பற்றி அரசாங்க மேலிடத்தில் பல தவறான கருத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால், உடல் உழைப்பாலும் பொருட்செலவாலும் செய்துள்ள தியாகங்கள் காரணமாகவும், பொது மக்களுக்காக வரிந்து கட்டிக்கொண்டு உடலும் உயிரும் சோரக் கால மெல்லாம் உழைத்ததன் விளைவாகவும் அவர் தம் முடைய உயர்ந்த ஒழுக்கத்தையும் மாசற்ற தொண் டுள்ளத்தையும் மக்கள் மன்றத்தில் நிறுவிக் காட்டி யுள்ளார். ஆம். உயர்திரு. லட்சுமி நரசிம்முலு செட்டியார் அவர்களை நினைத்துக்கொண்டுதான் இதையெல்லாம் சொல்கிறேன்!" என்று கேட்டவர் உள்ளம் நெகிழ, உவகை கொண்டு, கண்களில் நீர் கலங்கப் பேசினார். நார்ட்டன் துரை இவ்வாறு தம் நெஞ்சம் திறந்து பேசிய அந்நாளில், லட்சுமி நரசிம் முலு என்றாலே ஆட்சியாளருக்கு வேம்பாய் இருந் தது. அவரை அரசாங்கத்தார் ராஜத்துவேஷி யாகவே கருதினர். வேட்டை நாய்போலப் போலீஸ் அவரை மோப்பம் பிடித்த வண்ணம் இருந்தது. அவருடைய பேச்சுக்களெல்லாம் மிகக் கவனமாக ஆராயப்பட்டன. பிற்காலத்தில் தேச பத்தர்களை இரகசியப் போலீசார் சுற்றிச்சுற்றி வளையமிட்டுக் கொண்டிருந்தது போல அந்நாளில் லட்சுமி நரசிம் முலுவை இரகசியப் போலீசார், அவர் எங்குச் சென்

ரும், பின் தொடர்ந்து கண்காணித்த வண்ணம் இருந்தனர்.

நார்ட்டன் துரை மகனாரின் நல்லெண்ணம் போல லட்சுமி நரசிம்முலு பச்சையப்பர் அறநிலையத்தின் காவலர்களுள் ஒருவராக 1854-ஆம் ஆண்டிலேயே—நார்ட்டன் துரை தம் கருத்தை வெளியிட்ட அந்த ஆண்டிலேயே—நியமனம் பெற்றார்.[25A]

1857-ஆம் ஆண்டில் வடநாட்டில் புகழ் பெற்ற சிப்பாய்கள் புரட்சி ஏற்பட்டது. அதற்குப் பின் சென்னைச் சுதேசிச் சங்கத்தின் தலைவராய் விளங்கிய லட்சுமி நரசிம்முலு, இங்கிலாந்து அரசாங்கம் மதத் துறையில் தொடர்ந்து நடுவுநிலைமைப் பாதையைப் பின்பற்ற வேண்டுமென்ற ஒரு விண்ணப்பத்தை அனுப்பினார். அது இங்கிலாந்து நாட்டு அறிஞர்களால் ஆர்வத்துடன் படிக்கப் பெற்றது; ஆதரவான பதிலையும் பெற்றது.

காலம் மாறத் தொடங்கியது. திரு. லட்சுமி நரசிம்முலுவைப்பற்றி அரசாங்கத்தினர் கொண்டிருந்த பல தவறான கருத்துக்களும் மாயத் தொடங்கின. ஐரோப்பிய மக்களும் இந்திய மக்களும் அவரை ஒருசேரப் போற்றுவதைக் கண்ட அரசாங்கம், தன் பகை நோக்கை மெல்ல மெல்ல மாற்றிக்கொண்டது; நாட்டுக்காக அவர் செய்த நற்பணிகளைப் போற்றும் வகையில், 1861-ஆம் ஆண்டில் சி. எஸ். ஐ.[26] என்ற பட்டத்தை அவருக்கு வழங்கியது; 1863-ஆம் ஆண்டில் சென்னைச் சட்ட மன்றத்தின் மேல் சபையின் உறுப்பினராகவும் செய்தது. வழக்கம் போலப் பச்சையப்பர் கல்லூரியின் ஆண்டு விழாவில் பேச நேர்ந்த போது,

1864-ஆம் ஆண்டில் ஜான் புரூஸ் நார்ட்டன் லட்சுமி நரசிம்முலு பெற்ற சிறப்புக்களைப் போற்றிப் புகழ் வதை வரலாற்றில் காண்கிறோம்.

காலஞ்செல்லச்செல்ல லட்சுமி நரசிம்முலு வின் அரசியல் பொதுநலத் தொண்டு விரிவடைய லாயிற்று. மைசூரைப்பற்றி அவர் மனம் சிந்தனை யில் ஆழ்ந்தது. திப்புவோடு வெள்ளையர்கள் நிகழ்த்திய போரின் போது வெள்ளை அரசாங்கம் ஹைதராபாது நைசாமோடு திரை மறைவில் பல உடன்படிக்கைகளைச் செய்துகொண்டது. அந்த உடன்படிக்கைளின் நோக்கம் நாம் கதைகளில் படிக் கின்ற குரங்கைப்போல நீதிபதியாய் நின்று, மைசூரை அந்த நாட்டு அரச குடும்பத்தினின்றும் பறித்து, திப்புவுக்கு விரோதமாகத் தங்களுக்குத் துணை புரிந்த நைசாமுக்குத் தருவதாக நடித்து, நய வஞ்சகம் புரிவதே ஆகும். இதை உணர்ந்த திரு. லட்சுமி நரசிம்முலுவின் தொண்டுள்ளம் ஓய்ந்து ஒடுங்கிப் போக ஒப்பவில்லை. சென்னையிலிருந்த திரு. லட்சுமி நரசிம்முலு மைசூருக்கும் ஹைதரா பாதிற்கும் சிட்டாய்ப் பறந்தார்; கிருஷ்ணராஜ உடையாரைக் கண்டு, ஓர் இளைஞனைத் தத்துப் பிள்ளையாக எடுத்து மைசூரை வெள்ளையர் கையில் சிக்காவண்ணம் காப்பாற்ற யோசனை கூறினார்; அவ்வாறே ஹைதராபாதின் புகழ் வாய்ந்த சர். சாலர்சன்[27] என்ற அமைச்சரைக் கண்டு திரை மறைவில் நடந்த உடன்படிக்கைப்படி திப்புவுக்கு எதிராக வெள்ளையருக்கு உதவி புரிந்ததற்காக (மைசூர் மன்னருக்கு வாரிசு ஏற்படாவிடில்) ஹைத ராபாதிற்குச் சேரவேண்டிய உடைமைகளையெல் லாம் கோட்டை விட்டுவிடாமல் இருக்கும்படி எச்

சரித்து ஊக்கினர். ஆம், நமக்குள் அடித்துக் கொண்டு எங்கிருந்தோ வந்த நாடோடிக்குப் பாரத நாட்டு மண்ணைப் பறிகொடுக்கக்கூடாது என்பது தான் திரு. லட்சுமி நரசிம்முலுவின் திடமான கருத்து. ஆராய்ந்து பார்க்குமிடத்து நூறு ஆண்டுகட்கு முன்பு தம் ராஜ்யத்தின் எல்லையையும் கடந்து, 'இந்தியா இந்தியருக்கே' என்று எண்ணிச் செயல் புரிந்த ஒரு பெருந்தலைவர் தமிழகத்தின் தலைநகரில் தோன்றிய திரு. லட்சுமி நரசிம்முலுவே என்று எண்ணி வியந்து மகிழ வேண்டியுள்ளது! திரு. லட்சுமி நரசிம்முலுவின் முயற்சியின் பயனாக வெள்ளை அரசாங்கம் இந்திய மன்னர்களுக்குத் துரோகம் புரியத் துணிவு கொள்ளவில்லை. மைசூர் மன்னரின் தத்துப் பிள்ளையை ஆட்சிக்குரியவராக ஏற்றுக்கொண்டது அந்நிய ஏகாதிபத்தியம். இதற்கிடையில் தம் அரிய நண்பரும் தலைசிறந்த வழக்கறிஞருமாகிய ஜான் புரூஸ் நார்ட்டன் துணைகொண்டு லட்சுமி நரசிம்முலு இறந்துபோன தஞ்சை மன்னரின் விதவைகள் நல்ல நிலையில் வாழ எல்லா முயற்சிகளையும் செய்தார்; அவ்வாறே தமிழ் நாட்டின் சிற்றரசுகள் பல சிதைந்தொழியக் காரணமாயிருந்த ஆர்க்காட்டு நவாபுவின் குடும்பமும் துன்பக் கடலில் மூழ்காவண்ணம் காத்தார். 'ஆயிரம் உண்டிங்கு பகை; என்றாலும், அதை அந்நியர் பயன்படுத்தி நாட்டை மேலும் பாழாக்க அனுமதிக்கலாகாது,' என்பதே வீர லட்சுமி நரசிம்முலுவின் தெளிந்த கொள்கை. அதனாலேதான் மைசூர்—தஞ்சை—ஆர்க்காடு இவற்றிற்கு இடையே உள்ள வேறுபாடுகளை—மாறுபாடுகளை — எல்லாம் கனவிலும் கருதாது அப்பெருந்தகை தொண்டாற்றினர்.

1864-ஆம் ஆண்டில் திரு. லட்சுமி நரசிம்முலு பாடு பட்டுச் சேர்த்த பணத்தையெல்லாம் நாட்டின் நலனுக்காக வாரியிறைத்துவிட்டு வெறுங்கையராய் நிற்கும் நிலைக்கு இரையானார். மிகுந்த பொருட் செலவில் அவர் நடத்திய 'கிரெஸென்ட் (இளம் பிறை) நாட்டு மக்களைக் கப்பியிருந்த அடிமை இருள் நீங்க ஒளி வீசியது உண்மைதான். ஆனால், செல்வச் சீமான் திரு. லட்சுமி நரசிம்முலுவை வறியவர் ஆக்கியதும் அந்த 'இளம்பிறை' தான். திரு. லட்சுமி நரசிம்முலுவின் வியாபாரம் நாளுக்கு நாள் நலிவடைந்தது. அவருடைய மைந்தரும் வாணிபத்தில் நாட்டமின்றிப் பொருள் இழப்புப் பேரளவிற்கு ஏற்படும்படி செய்துவிட்டார். 'இளம்பிறை' மறைந்தது; திரு. லட்சுமி நரசிம்முலுவின் செல்வ வாழ்வும் ஒழிந்தது. இதற்குப் பின் வாழ்நாள் முழுவதும் திரு. லட்சுமி நரசிம்முலு வறுமையோடு போராடிப் போராடியே — உயிர் வாழ்ந்து — உயிர் துறந்தார். இறுதியாக 1868-ஆம் ஆண்டில் மாவீரர் லட்சுமி நரசிம்முலு மறைந்தபோது, 'இந்தப் பெருந்தகைக்கு இணையான தேச பக்தரும் தியாகியும் இந்தியா எங்கணும் இல்லை!' என்று பாரத மக்கள் போற்றிப் புகழ்ந்த புகழ்ச் செல்வந்தான், அவர் விட்டுச் சென்றது. இந்த வகையில் பிற்காலத்தில் தோன்றிய பெருவீரர் வ. உ. சி.க்கும் முன்னோடியாய் அமைந்தவர் திரு. லட்சுமி நரசிம்முலு என்றே சொல்ல வேண்டும்.

வழக்கம்போல 1869-ஆம் ஆண்டு பச்சையப்பர் கல்லூரியின் ஆண்டு விழாவில் சொற்பொழிவாற்றிய ஜான் புரூஸ் நார்ட்டன், தம் அரிய நண்பர் திரு. லட்சுமி நரசிம்முலுவின் மறைவை நினைந்து

உள்ளம் உருகிப் பேசினுர்: " அவர் எனக்குப் பல் லாண்டுகளாக மிக நெருங்கிய நண்பர்களுள் ஒருவ ராய் இருந்தார். நான் மனமாறப் போற்றக்கூடிய வேறொரு தலைவரை இந்நாள் வரை கண்டதில்லை. இப்பொழுது நான் உளமுருகி உங்களிடம் பேசுவது திரு. லட்சுமி நரசிம்முலுவின் மறைவால் எனக்குச் சொந்த முறையில் ஏற்பட்ட இழப்பைப்பற்றி அன்று; ஒரு சிறந்த பெரிய மனிதரை இழந்து விட்டதால் சமூகம் முழுவதும் அடைந்திருக்கும் பேரிழப்புப் பற்றியேயாகும். உயர்ந்த படிப்பும் ஒப் பற்ற திறமைகளும் சிறந்த பண்பாடும் கூர்ந்த மதி யும் பெற்றிருந்த லட்சுமி நரசிம்முலு வாய் வீச்சு வீரரல்லர். உண்மையான தேச பத்தர் அவரே. ஆரவாரமான மேடைப் பேச்சாளர் அல் லர் அவர். கேட்போர் சிந்தனைக்கும் நியாய உணர்ச் சிக்கும் விருந்தளிக்கும் நாவலர் அவர். நெடுங் காலத்திற்கு முன்பே தம் திறமைகளையும் செல்வச் சிறப்பையும் நாட்டின் நல்வாழ்விற்காகக் காணிக்கை யாக்கத் துணிந்த உத்தமர் அவர். அவ்வாறு அவர் துணிந்த அந்தக் காலம் ஆபத்துகள் குறை வாய் இருப்பினும் அல்லல்கள் நிறைந்த காலம். இன்றிருக்கும் சூழ்நிலையைவிடக் கொடிய சூழ்நிலை பொதுநலத் தொண்டர்களை அச்சுறுத்திக்கொண் டிருந்த அக்காலத்தில், அவர் அவ்வாறு துணிந் தார்.

"நாட்டு மக்களின் நல்வாழ்விற்காக ஒரு பத்திரி கையைத் தொடங்கித் திறம்பட நடத்துவது என் பது செயற்கருஞ்செயல். அச்செயலைச் செய்த பெரியார் திரு. லட்சுமி நரசிம்முலு. அதன் விளை வாக அவருக்கு நன்மையைவிடத் தீமையே அதிக

மாய்க் கிடைத்தது. அது காரணமாக அவர் அடைந்த இழப்புகளுக்கோர் அளவில்லை. அவர் நடத்திய 'இளம்பிறை'யைக் கண்டவர்கள் அப்பத்திரிகை எவ்வளவு வாதத்திறமையோடும் பகுத்தறிவோடும் கட்டுரைகளை வெளியிட்டது என்பதையும் எவ்வளவு அமைதியோடும் பெருந்தன்மையோடும் அப்பத்திரிகையில் கருத்துக்கள் வெளியிடப்பட்டன என்பதையும் ஒரு நாளும் மறக்க முடியாது. அந்தப் பத்திரிகை வாயிலாக நாட்டு மக்களின் அரசியல்—சமூக உரிமைகள் பல—அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்து காப்பாற்றப்பட்டன என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. சென்னைச் சட்ட மன்றத்தில் மேல்சபைக்குத் திரு. லட்சுமி நரசிமுலு நியமனம் பெற்ற போது நாட்டு மக்களுக்கிடையே நாநாவிதக் கருத்து வேறுபாடு இருந்த போதிலும், திரு. லட்சுமி நரசிம்முலுவே நம் பிரதிநிதியாய் இருப்பதற்கு மிகவும் தகுதி வாய்ந்த பெருந்தலைவர் என்ற எண்ணம் மோலோங்கி நின்றது. அவர் மறைந்த போது எல்லோரும், 'ஈடு செய்ய முடியாத இழப்பு!' என்றே எண்ணி மனம் கலங்கினர். அச்சமயத்தில் திரு. லட்சுமி நரசிம்முலுவின் நினைவை நிலை நாட்ட நடைபெற்ற கூட்டத்தில் ஒரு முடிவு செய்யப்பட்டது. அதன்படி பொருள் திரட்டி, இந்தப் பச்சையப்பர் மண்டபத்தில் அவரது திருவுருவப் படத்தைத் திறந்து வைக்க வேண்டுமென்றும் மாநிலக் கல்லூரியில் அவர் பெயரால் வடமொழிப் படிப்புக்கு ஒரு சேம நிதி அமைக்க வேண்டுமென்றும் உறுதி செய்யப்பட்டது. இந்த வகையில் அவர் நினைவை நிலை நாட்ட நல்லன்பர்கள் ஏராளமாகப் பொருளுதவி

செய்வார்களென்பதில் எனக்கு ஒரு சிறிதும் ஐய மில்லை. ஏற்கெனவே திருவிதாங்கூர் மன்னர் பெருமானும் அந்நாட்டின் திவான் சர். மாதவராவும் திரு. லட்சுமி நரசிம்முலுவின் மறைவு குறித்துத் தம் இரக்க உரைகளை அனுப்பியிருப்பதோடு, நினைவு நிதிக்காகப் பொருளுதவி செய்திருப்பதாக வும் கேள்விப்படுகிறேன். பல சுதேசி அன்பர்களும் பொருளுதவி செய்துள்ளார்கள். இங்குள்ள மற்றச் செல்வர்களும் துணைபுரிவார்களென்று நம்புகிறேன். பம்பாயில் வாழும் செல்வர்கள் போலல்லாவிட்டா லும், இங்குள்ள செல்வர்கள் தங்களாலியன்ற உதவி களைச் செய்வார்கள் என்றும் அதனால் எடுத்த இக் காரியம் வெற்றி பெறுவது உறுதி என்றும் நம்பு கிறேன்.''

இவ்வளவும் வீரத் தலைவர் திரு. லட்சுமி நரசிம்முலுவைப்பற்றி மேல் நாட்டுப் பேரறிஞர் நார்ட்டன் கூறிய நன்மொழிகள் என்று நினைக்கும் பொழுது தோன்றும் வியப்பிற்கும் மகிழ்விற்கும் எல்லையுண்டோ?

நார்ட்டனின் திட்டம் வெற்றி கண்டது. 1870-ஆம் ஆண்டில் தலைவர் லட்சுமி நரசிம்முலுவின் திருவுருவப் படம் பச்சையப்பர் மண்டபத்தை அணி செய்தது. அப்படத்தைச் சுட்டிக் காட்டி மறுபடி யும் வழக்கம் போல ஆண்டு விழாக் கூட்டத்தில் பேசிய நார்ட்டன் பெருமகனார் புகழ் மாலை சூட்டி வணக்கம் செலுத்தினார். அவர், 'திருவுருவப் படத் தில் காட்சியளிக்கும் லட்சுமி நரசிம்முலுவைப் பற்றிப் புகழ்ந்து பேசுவது தேவையற்றது என்றாலும், என் கையில் இதோ ஒரு கடிதம் இருக்கின்றது. இக்

கடிதம் ஒரு சுதேசி மற்றொரு சுதேசிக்கு எழுதியது. இக்கடிதத்தில் லட்சுமி நரசிம்முலுவைப்பற்றி மிக உயர்வாக எழுதப்பட்டுள்ளது. இந்த நாட்டின் ஆட்சி முறைகளிலுள்ள ஒவ்வொரு குற்றம் குறையையும் அரசாங்கத்தினர் ஆராய்ச்சி செய்யும்படி செய்தவர் லட்சுமி நரசிம்முலு என்ற அரிய உண்மையை இக்கடிதத்தை எழுதியவர் குறிப்பிட்டுள்ளார். எவ்விதமான ஐயத்துக்கும் இடம் தாராமல் உண்மை அன்புடன் எழுதப்பட்ட இக்கடிதம், நாட்டு மக்கள் எவ்வளவு உயர்வாக லட்சுமி நரசிம்முலுவை மதிக்கிறார்கள் என்பதற்கு ஒரு சிறந்த சான்றாகும். இக்கடிதம் முழுவதையும் வாசிக்க எனக்கு நேரமில்லை. ஆனால், லட்சுமி நரசிம்முலு ஊக்கம் நிறைந்த ஒழுக்கம் வாய்ந்த சிறந்த சீர்திருத்தவாதி என்றும், தம் கொள்கைகளைச் செயற்படுத்தத் தம் சொந்தப் பணத்தை வாரி இறைத்த வண்மையாளர் என்றும் கூறி அமைகின்றேன். திரு. ஹார்லியை ஆசிரியராகக் கொண்டு அவர் நிறுவிய 'இளம்பிறை' பல்லாண்டு காலம் நாட்டு மக்களின் நன்மைக்காகப் போராடியது. இந்த முயற்சியில் திரு. லட்சுமி நரசிம்முலு தம் செல்வத்தில் பெரும்பகுதியை இழந்தார். 1852-ஆம் ஆண்டில் அவர் வரைந்தனுப்பிய விண்ணப்பத்தை ஆட்சியாளர் முதலில் முணுமுணுப்போடு பார்த்தார்களென்றாலும், பிற்காலத்தில் வரிக் கொடுமை பற்றியும் அக்கொடுமைக்கு இரையான உழவர்களுக்கு விதிக்கப்பட்ட கடுந்தண்டனைகளைப்பற்றியும் ஆராய அமைக்கப்பெற்ற பல்வேறு குழுக்களுக்கும் அதுவே அடிப்படை. பிற்காலத்தில் அரசாங்கம் அவரைப் பெரிதும் போற்றி மதித்த செயல், ஆரம்ப

நாட்களில் அவர் செய்த தொண்டின் தூய்மை யையும் உண்மையையும் விளக்குகின்றது. இங்கி லாந்து நாட்டுப் பேரரசியாரிடமிருந்து அவர் ஸி. எஸ். ஐ. பட்டம் பெற்ற பொழுதும் மேல் சபை உறுப்பினரானபொழுதும் நாட்டு மக்கள் அவற்றைத் தங்கள் சிறந்த பிரதிநிதி பெற்ற சிறப்பாகவே கரு தினார்கள். நாட்டு மக்களுக்கு இன்னும் அதிகமாகப் பயன்படும் வேளையில் அவர் நம்மிடமிருந்து பிரிக்கப் பட்டுவிட்டார். பற்றற்ற உள்ளத்தோடும் அடக்கத் தோடும் பணிபுரிந்தவர் லட்சுமி நரசிம்முலு. கூர்ந்த அறிவும் அருள் கனிந்த வாழ்வும் படைத்தவர் லட்சுமி நரசிம்முலு. கல்வி வளர்ச்சிக்காக முன் அணியில்நின்று பாடுபட்ட பெருந்தகை அவர். அவ ருடைய இழப்பு ஈடு செய்ய முடியாதது என்பதை எல்லோரும் உணர்கின்றனர்.'

இவ்வாறு முற்றிலும் அயலாராகிய நார்ட்டன் பெருமகனார் வாயிலாகப் புகழ் பெற்ற பெருமை அந்நாளில் லட்சுமி நரசிம்முலு ஒருவருக்கே கிடைத்த தனிச் சிறப்பாகும்.

தம் அறுபத்திரண்டாம் வயதில் மண் ணுலக வாழ்வை நீத்த ஸ்ரீ லட்சுமி நரசிம்முலு, வாழ் வாங்கு வாழ்ந்த மனிதகுல மாணிக்கம்; ஒடுக்கப் பட்ட மக்களின் உரிமைக்காக ஓயாது உழைத்த உர வோர்; 19-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராயினும், பகுத்தறிவுக் கொள்கை படைத்த பண்பாளர்; ஆயினும், கலையிலும் ஒழுக்கத் திலும் கடவுள் உணர்ச்சியிலும் மிகுந்த நம்பிக்கை கொண்டவர்; அயலார் ஆட்சியை எதிர்த்து அறப் போர் புரிந்த அண்ணல்; நாட்டில் பொருளாதாரம்

சீர்பெற அல்லும் பகலும் பாடுபட்ட செம்மல்; பெண் கல்வியில் பெருவிருப்பம் கொண்ட பெரியார்; தம் சொந்தப் பணத்தைச் செலவழித்துப் பெண்களுக்கான பள்ளிக்கூடம் பலவற்றை நிறுவித் தாய்க் குலம் அறிவொளி பெறச் செய்த தகைமை சான்ற தலைவர்; விதவைகள் மறுமணத்தையுங்கூட வெறுப்பின்றி ஆதரித்த செயல்வீரர்; உழைப்பாளிகளுக்கு உற்ற நண்பராய்த் திகழ்ந்த உத்தமர்; மொழி இன வேறுபாடுகளையெல்லாம் கடந்து நின்று கலையும் பண்பாடும் வளரக் கடைசி மூச்சு உள்ள வரை காசையும் உழைப்பையும் ஒரு சிறிதும் மிச்சம் வைத்துக்கொள்ளாமல் காணிக்கையாக்கிய கருணை வள்ளல்; எத்தனையோ இளைஞர்கள் கல்வி ஒளி பெற, எவ்வளவோ பொருளை அள்ளி இறைத்த ஏந்தல்; சுருங்கச் சொன்னால், நாட்டின் பல்வேறு உயர்வுகளுக்காகவும் தம் வாழ்வின் ஒவ்வொரு பகுதியையும் மகிழ்வோடு உடைமையாக்கிய மாமுனிவர் லட்சுமி நரசிம்முலு எனலாம். அவர் வீரவாழ்வு ஒரு பெருங்காவியம். ஆம், கடவுளரும் போற்ற வேண்டிய அக்காவிய வாழ்வை, சுதந்தர இந்தியாவின் குடிமக்கள்—சிறப்பாகச் செந்தமிழ் நாட்டு மக்கள்—நன்றியோடு போற்றிப் பயன் கொள்வார்களாக!

அடிமை இந்தியாவுக்கு ஒரு லட்சுமி நரசிம்முலு போதும்; ஆனால், சுதந்தர இந்தியாவுக்கு ஆயிரம் ஆயிரம் லட்சுமி நரசிம்முலுகள் தேவையல்லவா?

II

# முதற்பெருந்தமிழர்

என்புடையார் அன்புடைய இராமசா மிக்குரிசில்!
உன்புடையார் நயசுகுணம் ஒவ்வொன்றை உன்னியுன்னி
அன்புடையார் பல்லோரும் ஆற்றும்வழி காணுராய்த்
துன்புடையா ராகிமனஞ் சோர்ந்திடவெங் ககன்றனையோ!
*[என்புடை—என்னிடத்தில்]*
இன்றேனும் பாலுமெனும் இன்சொலுடை யாய்!வைரக்
குன்றேனும் ஒவ்வாக் குணனுடையாய்! குற்றத்துன்
ஒன்றேனும் உனையணுக ஒண்ணுதோ? சார்ந்திருப்பின்
என்றேனும் நிற்பிரிதல் எம்மை வருத்திடுமோ!
*[இன்றேனும்-இன் + தேனும், நிற்பிரிதல்—உனைப் பிரிவது]*
'ஊர்க்குழைப்பான் போனுன்!' என் றுலைவாரும், 'போனுனிப்
பார்க்குழைப்பான்!' என்றுருகி நிற்பாரு மாய்க்கலங்க
ஆர்க்குழைப்பான் சென்ருய் அளியுடைய அண்ணலே!
—பெரும்புலவர், உ. வே. சாமிநாத ஐயர்

**சேலம்** *என்றவுடனே* **ராஜாஜி, விஜயராகவாசாரி யார், வரதராஜுலு நாயுடு** *போன்ற அரும்பெறல் அரசியல் தலைவர்களின் நினைவு வருதல் இயற்கை. ஆனல், இப்பெரியோர்கள் எல்லாம் தமிழக அரசியல் வானில் ஒளி காலுவதற்கு முன்பே* **சேலம் மாநகர்,** *செந்தமிழ் நாட்டின் புகழ், இந்திய அரசியல் வரலாற்றில் உச்சநிலை பெறும்பொருட்டு ஈன்றளித்த மாணிக்கமே சேலம்* **இராமசாமி முதலியார்.**

*இற்றைக்கு நூற்றுறு ஆண்டுகட்கு முன் (6—9—1852) சேலமாநகரில்* **தமிழ்த் தாயும் பாரத அன்னையும்** *செய்த தவப்பயனுல் தோன்றிய சான்றோரே*

திரு. முதலியார். இவர் பாட்டனார் கிழக்கிந்தியக் கம்பெனியில் துவிபாஷியாராய் (மொழி பெயர்ப் பாளராய்) இருந்தவர். இவர் தந்தையார் திரு. கோபாலசாமி முதலியார் சேலத்தில் செல்வாக்கு மிகுந்த நிலவுடைமையாளராய் விளங்கியவர்; தாசில் தாராய் இருந்தும் புகழ் ஈட்டியவர்.

இவ்வாறு கல்வியறிவும், செல்வச் சிறப்பும் நிறைந்த குடியில் தோன்றிய திரு. இராமசாமி முதலியார் தம் ஆறும் ஆண்டிலேயே சென்னை மா நகர்க்குக் கல்வியின்பொருட்டு அனுப்பப்பட்டார். தமிழகத்தின் தலை நகரில் அந்நாளில் இவருக்குப் பாதுகாவலராய் அமைந்த பெரியார் புகழ் மிக்க பெரும்புலவர் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் மைந்த ராகிய திரு. நாகலிங்க முதலியார் என்பவர். கதிர்வேலு உவாத்தியாயர் என்பவரிடம் ஆரம்பக் கல்வி பயின்ற நம் முதலியார், சென்னைப் பல்கலைக் கழகத் திற்கே வித்தாய் விளங்கிய சென்னை உயர்நிலைப் பள்ளியில்[1] சேர்ந்து கல்வி பயின்றார்; பின்னர் அப் பள்ளியினின்றும் பச்சையப்பர் பள்ளியில் சேர்ந்து அறிவொளி பெற்றார்; அதன் பின்னர் மாநிலக் கல்லூரியில் மறுபடியும் சேர்ந்து கல்வித்துறையில் வல்லாராயினார். மெற்றிக்குலேஷன் தேர்வில் திரு. முதலி யார் சிறந்த முறையில் தேர்ச்சி பெற்று, அரசாங்க உதவி நிதி பெற்றார்; மாநிலக் கல்லூரியில் பேரா சிரியர்கள் மதிக்கும் பெருநிலையையும், எண்ணற்ற பரிசுகளையும் எய்தினார்; சென்னைப் பல்கலைக் கழ கத்தாரின் கலை முதல் தேர்வில்[2] முதல்வராய் வெற்றி பெற்றார்; வரலாறு, ஆங்கிலம், தமிழ் ஆகிய துறை களில் புலமையுற்றார். 1871-ஆம் ஆண்டில் கலை இளை ஞர் தேர்வில்[3] மாநிலத்திலேயே முதல்வராய் வெற்றி

கண்டார். அந்நாளில் மாநிலக் கல்லூரியின் மதிப்பிற்குரிய தலைவராய் விளங்கிய தாம்ஸன்[4] திரு. முதலியாரின் புலமையை வியந்து தேர்வில் வெற்றி பெற்றதுமே அவருக்கு மாநிலக் கல்லூரியில் ஆங்கிலத் துணைப் பேராசிரியர் வேலையை அக மகிழ்ந்து அளித்தார். ஆனால், கல்வியைப்போலக் கருணை உணர்வும் மிக்கவராயிருந்த திரு. முதலியார் தமக்கு வந்த பதவியைத் தமக்கு அடுத்த நிலையில் தேர்வு பெற்ற ஒருவர் வாழ்க்கை வளம் பெறும்பொருட்டு வழங்கிவிட்டு, மேற்படிப்பில் ஈடுபட்டார்; வரலாற்றையும் தத்துவத்தையும் பாடங்களாக எடுத்து, கலை முதல்வர் தேர்வு[4] எழுதி 1873ல் அப்பட்டத்தைப் பெற்றார்; 1875-ஆம் ஆண்டில் மாநிலத்திலேயே முதல்வராகச் சட்டக் கல்விப் பட்டமாகிய சட்டக் கலை இளைஞர் தேர்வில்[5] முதல்வராய்த் தேர்ச்சி பெற்றார். இத்தகைய ஈடு இணையில்லாக் கல்வி மேம்பாட்டைத் திரு. முதலியார் பெற்றிருப்பதை நீதிபதி ஹாலோவே[6] என்பவர் அறிந்து, திரு. முதலியார் அவர்கட்கு வழக்கறிஞர் பயிற்சி தரும்படி ஓ ஸல்லிவன் என்பவரை வேண்டினர். திரு. முதலியார் வழக்கறிஞர் பயிற்சி பெற்று, 1876ல் தம்மை ஓர் உயர்நீதி மன்ற வழக்கறிஞராய்ப் பதிவு செய்து கொண்டு சேலத்தில் தொழில் புரியத்தொடங்கினர்.

வழக்கறிஞர் தொழிலில் கட்சிக்காரர்களும் பொதுமக்களும் நீதிபதிகளும் போற்றும் திறனையும் புகழையும் பெற்றார் திரு. முதலியார். ஆயினும், இவர் மனம் நீதி வழங்கும் அதிகார நிலை பெற்று நாட்டுக்கு நன்மை புரிய விரும்பியது. அதனால் இவர் விருப்பத்தையும், விண்ணப்பத்தையும் அந்நாளில் மாவட்ட நீதிபதியாயிருந்தவர் ஆதரித்து, அர

சாங்கத்திற்கு எழுதினார். தம் ஆதரிப்புக் குறிப்பில் திரு. முதலியாரின் தெளிந்த அறிவையும் ஒழுக்க உறுதியையும் அவர் போற்றிப் புகழ்ந்திருந்தார். திரு. முதலியார் அவர்கள் 1877ல் திருச்சி மாவட்ட முனிசிபாக நியமனம் பெற்றார். தம் பதவியில் சிறந்த முறையில் பணியாற்றிய திரு. முதலியார் நடுவு நிலைமைக்கும் ஒருதலைப்படாப் பண்பிற்கும் சிறந்த எடுத்துக்காட்டாகும் புகழ் பெற்றார். சமன் செய்து சீர்தூக்கிச் சிறந்த முடிவு கூறும் தம் துறையில் எவ்வளவு பெரியவரும் தலையிடுவதைத் திரு. முதலியார் எந்த நாளிலும் விரும்பியதில்லை. ஒரு முறை தமக்கு மிக வேண்டிய பெரியவரிடமிருந்து கடிதம் பெற்று வந்த ஒரு கட்சிக்காரரைத் திரு. முதலியார் அன்போடு உபசரித்துத் தம் வாகனத்திலேயே நீதி மன்றத்திற்கும் அழைத்துச் சென்றார். ஆனால், அக்கட்சிக்காரரின் வழக்குப்பற்றிய முடிவைத் தாம் கூறியதும் அக்கட்சிக்காரர் நீதி மன்றத்தில் எங்கிருக்கிறார் என்பதையும் தெரிந்துகொள்ள முடியவில்லை!

திரு. முதலியார் அவர்கள் புகழ் வாய்ந்த நீதிபதியாய் விளங்கினார். ஆயினும், முழுநேரப் பொதுமக்கள் ஊழியராய் விளங்க வேண்டும் என்ற ஆர்வம் படைத்திருந்த திரு. முதலியாருக்கு அரசாங்க அலுவல் பிடிக்கவில்லை. அந்நாளில் புதுக்கோட்டைத் திவானாய்ப் புகழுடன் விளங்கிய சேஷைய சாஸ்திரியார் திரு. முதலியார் அவர்களின் புகழைக் கேட்டுணர்ந்து விம்மிதமுற்றார். 'நான் சேலம் இராமசாமி முதலியாரை நேரிற்காணும் பேற்றினைப் பெறவில்லை என்றாலும், அவர் பண்புகளையும், நடுவு நிலை வழுவாத் திறனையும், ஒழுக்க

மேம்பாட்டையும், மக்களிடம் பெற்றுள்ள மதிப்பையும் நன்ருக அறிவேன். அவரை உருவாக்கியமைக்குச் சென்னைப் பல்கலைக் கழகமே பெருமை கொள்ளலாம் என்று எப்போதும் கருதியிருக்கிறேன். மேலும், அவர் தம் பதவியில் படிப்படியாக உயர்வாராக!' என்று ஒரு முறை பாராட்டிஞர். ஆனல், சேஷைய சாஸ்திரியார் எண்ணத்தையும் விஞ்சிய திண்ணிய நிலைமையைப் பெற்ருர் சேலம் முதலியார். தம்பதவியை இவர் இருமுறை விட்டு விலகினர். 1882-ல் இறுதியாக இவர் ராஜிநாமாவை அரசாங்கம் ஏற்றது. பின்னர்ச் சென்னை சேர்ந்து தனிப்பட்ட முறையில் வழக்கறிஞராய்த் தொழிலாற்றிஞர் திரு. முதலியார். அப்போது இவர் காட்டிய அறிவின் மேதையையும், ஒழுக்கச் சிறப்பையும் உணர்ந்து போற்ருத அறிஞரில்லை. சட்டம் இவருக்கு வருவாய் தரும் தொழிலாய் இல்லை. மனித குலத்தை உயர்த்தும் சாத்திரமாகவே அது விளங்கியது. அதன் பயனுக இவர் புகழ் பெற்ற லா ஜர்னல்[7] பத்திரிகையை ஆரம்பித்து, 1890-ஆம் ஆண்டு வரை அதன் தலைமை ஆசிரியராய் விளங்கிஞர்.

திரு. முதலியார் அவர்கள் அந்நாளில் பச்சையப்பர் அறநிலையத்திலும்,[8] சென்னைப் பல்கலைக் கழகத்திலும் உறுப்பினராய் அமைந்து ஆற்றிய தொண்டுகள் மதிப்பிடற்கரியன; கல்வித் துறையாளர் மறவாது போற்றி வணங்குதற்குரியன.

திரு. முதலியார் அவர்கள் அரசியல் வாழ்வின் தனிச்சிறப்பை இக்கட்டுரையின் இறுதியில் ஆராயுமுன் தமிழிலக்கியத்தின்பால் இவர் கொண்டிருந்த

தனி அன்பையும், அத்துறையில் நிகரற்ற புல வராய் விளங்கிய இவர் பேராண்மையையும் குறிப் பிடாமலிருத்தல் அறமாகாது. காலஞ் சென்ற அழியாப் புகழ்ச் சாமிநாதய்யர் பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும்படி வழிகாட்டிய தனி முதல்வர், சேலம் இராமசாமி முதலியார் அவர்களே. இவ்வுண் மையை மிக்க நன்றியுணர்ச்சியோடு டாக்டர். சாமி நாதய்யர் 'என் சரித்திரத்'தில், மிக விரிவாகப் பல இடங்களில் மனமார எழுதியுள்ளார். இன்றும் அந்த நூலைப் படிப்பார் அதில் 'ஐயரவர்களைப் பண் டைத் தமிழ்நூல் பதிப்பாசிரியராக்குவதற்கு முதற் காரணராயிருந்தவர்' என்ற குறிப்புடன் திரு. இராமசாமி முதலியாரின் தெய்வநலம் கனிந்த திரு வுருவப்படம் திகழக் காணலாம். அப்படத்தைச் சுற்றி ஐயர் அவர்களின் பழைய நினைவுகள் ஒளி வீசக் காணலாம். சேலம் இராமசாமி முதலி யாரைப்பற்றி இறவாத புகழுடைய ஐயரவர்களின் அட்சர இலட்சம் பெறும் நிறைவான வருணனை களில் முக்கியமான பகுதிகள் வருமாறு :[9]

"காலேஜ் வேலையைப் பார்த்துக்கொண்டும் வீட்டுக்கு வரும் மாணாக்கர்களுக்கு ஒழிந்த நேரங் களில் பாடம் சொல்லிக்கொண்டும் பொழுது போக்கி வந்தேன். அச்சமயம் அரியலூரிலிருந்து சேலம் இராமசாமி முதலியார் என்பவர் கும்பகோணத்துக்கு முன்சீபாக மாற்றப் பெற்று வந்தார். அவரிடம் என் நல்லூழ் என்னைக் கொண்டு போய் விட்டது. அவருடைய நட்பினால் என் வாழ்க்கையில் ஒரு புதுத் துறை தோன்றியது; தமிழிலக்கியத்தின் விரிவை அறிய முடிந்தது. அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், உலா, கோவை முதலிய பிரபந்தங்களிலும் புராணங்களிலும் தமிழின் பம் கண்டு மகிழ்வதோடு நில்லாமற் பழமையும் பெருமதிப்

புமுடைய தண்டமிழ் நூல்களிற் பொதிந்து கிடக்கும் இன்ற மிழியற்கையின்பத்தை மாந்தி நான் மகிழ்வதோடு, பிறரும் அறிந்து இன்புறச் செய்யும் பேறு எனக்கு வாய்த்தது.

"முதலியார் சேலத்தில் ஒரு பெரிய மிட்டா ஜமீந்தார் பரம்பரையினர்; இளமையிலேயே பேர றிவு படைத்து விளங்கினர்; தமிழிலும் இசை ஞானத்திலும் வட மொழியிலும் பழக்கமுள்ளவர். கும்பகோணத்தில் வேலை பார்த்து வந்த காலத் தில் இவருடைய திறமை ஓரளவு வெளிப்பட்டு ஒளிர்ந்தமையால் இவரைத் தக்க கனவான்கள் சென்று பார்த்துப் பேசிவிட்டு வருவார்கள். கும்ப கோணத்துக்கு நூதனமாக உத்தியோகஸ்தர்கள் வந்தால் அவர்களிடம் மனிதர்களை அனுப்பிப் பார்த்துவரச் செய்வதும், குரு பூஜை முதலிய விசேஷ தினங்களில் மடத்திற்கு வரவேண்டு மென்று அழைக்கச் செய்வதும் திருவாவடுதுறை மடத்து வழக்கம். சேலம் இராமசுவாமி முதலியா ருடைய கல்வியறிவையும் பெருந்தன்மையையும் கேள்வியுற்ற ஸ்ரீசுப்பிரமணிய தேசிகர் இவரைப் பார்த்து வரும்படி காறுபாறு தம்பிரானையும் அவ ருடன் வேறு சிலரையும் அனுப்பினர். தம்பிரான் பரிவாரங்களுடன் சென்று முதலியாரைக் கண்டு பேசிக்கொண்டிருந்தார்.

"இராமசுவாமி முதலியார் திருவாவடுதுறை மடத்தின் பழம்பெருமையை நன்குணர்ந்தவராத லின், தம்பிரானுடன் சம்பாஷணை செய்து வரும் போது மடத்து நிருவாகத்தைப்பற்றிப் பேசுவ தோடு நில்லாமல், கல்வி சம்பந்தமாகவும் விசாரிக்க ஆரம்பித்தார்; 'மடத்தில் தமிழ்க் கல்வியபிவிருத் திக்கு என்ன செய்கிறீர்கள்? வித்துவான்களாக

யார் யார் இருக்கிறார்கள்? எத்தனை பேர்கள் படிக்கிறார்கள்?' என்பவை போன்ற கேள்விகளைக் கேட்டார். தம்பிரான் ஏற்ற விடை அளித்து வந்தார். தமிழ், வடமொழி, சங்கீதம் என்னும் மூன்றிலும் சிறந்த தேர்ச்சியுடைய வித்துவான்கள் அடிக்கடி மடத்துக்கு வந்து சம்மானம் பெற்றுச் செல்வார்களென்றும், ஆதீனத்தலைவரே சிறந்த கல்விமானென்றும், அவரிடத்திலும் சின்னப் பண்டார ஸந்நிதிகளிடத்திலும் பல மாணுக்கர்கள் தமிழ்ப் பாடம் கேட்டு வருகிறார்களென்றும் தெரிவித்தார்.

"இவ்வாறு தெரிவித்துக்கொண்டு வரும்போது அக்காலத்து மடத்துக்காரியஸ்தராய் இருந்தவரும், தம்பிரானுடன் வந்தவருமாகிய சிவசுப்பிரமணிய பிள்ளை யென்பவர், 'மடத்திலே படித்துக்கொண்டிருந்த மாணக்கர்களுள் ஒருவராகிய சாமிநாதையர் என்பவரே இவ்வூர்க் 'கவர்ன்மெண்ட் காலேஜி'ல் தமிழ்ப் பண்டிதராய் இருக்கிறார்,' என்று சொன்னார்.

"அது கேட்ட முதலியார், 'அப்படியா! நான் அவரைப் பார்த்ததில்லை,' என்றார்.

"பின்னும் சிறிது நேரம் பேசியிருந்துவிட்டுத் தம்பிரான் முதலியோர் விடை பெற்றுச் சென்று ஸ்ரீ. சுப்பிரமணிய தேசிகரிடம் நிகழ்ந்தவற்றையெல்லாம் தெரிவித்தனர். உடனே ஆதீனத் தலைவர், 'இப்போது இங்கே முனிசீப்பாய் வந்திருக்கும் முதலியார் தமிழில் நல்ல பயிற்சி உடையவரென்று தோற்றுகிறது. அவரை நீங்கள் போய்ப் பார்த்து வர வேண்டும்,' என்று எனக்குச் சொல்லி அனுப்பினார்.

"அவரைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் முதலில் என்னிடமில்லை; சுப்பிரமணிய தேசிகர் சொல்லியனுப்பினமையின், நான் சென்று பார்க்கலாமென்று ஒரு நாள் (21—10—1880) புறப்பட்டேன். அன்று வியாழக்கிழமை. அவர் இருந்த வீட்டை அடைந்து அவரைக் கண்டேன். நான் காலேஜில் இருப்பதையும் மடத்தில் படித்தவனென்பதையும் சொன்னேன். அவர் யாரோ அயலாரிடம் பராமுகமாகப் பேசுவது போலவே பேசினுர். என்னேடு மிக்க விருப்பத்துடன் பேசுவதாகப் புலப்படவில்லை. 'அதிகாரப் பதவியினுல் இப்படி இருக்கிருர்; தமிழ் படித்தவராக இருந்தால் இப்படியா நம்மிடம் பேசுவார்?' என்று நான் எண்ணலானேன்.

" 'நீங்கள் யாரிடம் பாடம் கேட்டீர்கள்?' என்று அவர் கேட்டார்.

" 'மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்டேன்,' என்றேன்.

"பிள்ளையவர்கள் பெயரைக் கேட்டவுடன் அவரிடம் ஏதாவது கிளர்ச்சி உண்டாகுமென்று எதிர்பார்த்தேன். என்னுடைய உத்தியோகத்துக்காக என்னை மதிக்காவிட்டாலும், பிள்ளையவர்கள் மாணுக்கனென்ற முறையிலாவது என்னிடம் மனம் கலந்து பேசலாமே! அவர் இப்படிப் பேச முன் வரவில்லை. கணக்காகவே பேசினுர்.

"பிள்ளையவர்கள் பெயரைக் கேட்டுப் புடைபெயர்ச்சியே இல்லாத இவராவது, தமிழில் அபிமானம் உடையவராக இருப்பதாவது! எல்லாம் பொய்யாய் இருக்கும் என்று நான் தீர்மானம் செய்து கொண்டேன்.

"அவர் கேள்வி கேட்பதை நிறுத்தவில்லை. 'என்ன என்ன பாடம் கேட்டிருக்கிறீர்கள்?' என்ற கேள்வி அடுத்தபடி அவரிடமிருந்து வந்தது. 'இதற்கு நாம் பதில் சொல்லும் வகையில் இவரைப் பிரமிக்கும்படி செய்துவிடலாம்!' என்ற நிச்சய புத்தியோடு நான் படித்த புஸ்தகங்களின் வரிசையை ஒப்பிக்கலானேன். 'குடந்தையந்தாதி, மறைசையந்தாதி, புகலூரந்தாதி, திருவரங்கத்தந்தாதி, அழகரந்தாதி, கம்பரந்தாதி, முல்லையந்தாதி, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ், முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ், அகிலாண்ட நாயகி பிள்ளைத் தமிழ், சேக்கிழார் பிள்ளைத் தமிழ், திருக்கோவையார், தஞ்சை வாணன் கோவை..............'' என்று சொல்லிக்கொண்டே போனேன். அந்தாதிகளில் இருபது, கலம்பகங்களில் இருபது, கோவைகளில் பதினைந்து, பிள்ளைத் தமிழ்களில் முப்பது, உலாக்களில் இருபது, தூதுகள் இப்படியே பிரபந்தங்களை அடுக்கினேன். அவர் முகத்தில் கடுகளவு வியப்புக்கூடத் தோன்றவில்லை.

"'இதெல்லாம் படித்து என்ன பிரயோசனம்?' என்று திடீரென்று அவர் இடைமறித்துக் கூறினார். நான் மிக்க ஏமாற்றம் அடைந்தேன். 'இவர் இங்கிலிஷ் படித்து அதிலே மோகங் கொண்டவராய் இருக்கலாம். அதனாலேதான் இப்படிச் சொல்லுகிறார்,' என்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று. ஆனாலும் நான் விடவில்லை. புராண வரிசையைத் தொடங்கினேன்.

"திருவிளையாடற் புராணம், திருநாகைக் காரோணப் புராணம், மாயூரப் புராணம், கந்த புராணம், பெரிய புராணம், குற்றாலப் புராணம்......

"அவர் பழையபடியே கற்சிலைபோல இருந்தார். 'நைடதம், பிரபுலிங்க லீலை, சிவஞான போதம், சிவஞான சித்தியார் உரை......' என்னும் நூல்களின் பெயர்களைச் சொன்னேன். இலக்கண நூல்களை எடுத்துக் கூறினேன். அப்பொழுதும் அவருக்குத் திருத்தி உண்டாகவில்லை. 'அடடா முக்கியமான வற்றையல்லவா மறந்துவிட்டோம்? அதை முதலிலேயே சொல்லியிருந்தால் இவரை வழிக்குக் கொண்டு வந்திருக்கலாமே!' என்ற உறுதியுடன், 'கம்பராமாயணம் முழுவதும் இரண்டு மூன்று முறை படித்திருக்கிறேன். பிள்ளையவர்களிடமும் சில காண்டங்களைப் பாடம் கேட்டிருக்கிறேன்' என்றேன்.

"இராமசுவாமி முதலியார், 'சரி, அவ்வளவு தானே?' என்று கேட்டார். எனக்கு மிகவும் அதிருத்தி ஏற்பட்டுவிட்டது. 'கம்பராமாயணத்தில் கூடவா இவ்வளவு பராமுகம்! இவ்வளவு அசட்டை!' என்ற நினைவே அதற்குக் காரணம். அதற்கு மேலே சொல்ல என்ன இருக்கிறது? ஆனால் அவர் என்னை விடுகிறவராக இல்லை. மேலும் கேள்வி கேட்கலானார்.

"'இந்தப் பிற்காலத்துப் புஸ்தகங்களெல்லாம் படித்தது சரிதான். பழைய நூல்களில் ஏதாவது படித்ததுண்டா?'

"எனக்கு அவர் எதைக்கருதிக் கேட்டாரென்பது தெரியவில்லை. 'பிள்ளையவர்கள் இயற்றிய நூல்களையே நான் படித்திருப்பதாக இவர் எண்ணிக் கொண்டாரோ? கந்த புராணம், பெரிய புராணம முதலியவைகளெல்லாம் பழைய நூல்களல்லவோ? கம்பராமாயணம் பழைய நூல்தானே? பழைய நூலென்று இவர் வேறு எதைக் கருதுகிறார்?' என்று யோசிக்கலானேன்.

"'நான் சொன்னவற்றில் எவ்வளவோ பழைய நூல்கள் இருக்கின்றனவே!' என்று நான் கேட்டேன்.

"'அவைகளுக்கெல்லாம் மூலமான நூல்களைப் படித்திருக்கிறீர்களா?' என்று அவர் கேட்ட போது தான் அவரிடம் ஏதோ சரக்கு இருக்கிறதென்ற எண்ணம் எனக்கு உண்டாயிற்று.

"'தாங்கள் எந்த நூல்களைச் சொல்லுகிறீர்க ளென்று தெரியவில்லையே!' என்றேன்.

"'**சீவக சிந்தாமணி படித்திருக்கிறீர்களா? மணி மேகலை படித்திருக்கிறீர்களா? சிலப்பதிகாரம் படித்திருக்கிறீர்களா?**'

"அவர் சொன்ன நூல்களை நான் படித்ததில்லை; என்னுடைய ஆசிரியரே படித்ததில்லை. புஸ்தகத் தைக் கூட நான் கண்ணால் பார்த்ததில்லை. ஆனா லும், 'இவ்வளவு புஸ்தகங்களைப் படித்ததாகச் சொன்னதை ஒரு பொருட்படுத்தாமல் எவையோ இரண்டு மூன்று நூல்களைப் படிக்கவில்லை என்ப தைப் பிரமாதமாகச் சொல்ல வந்துவிட்டாரே!' என்ற நினைவோடு பெருமிதமும் சேர்ந்துகொண் டது. 'புஸ்தகம் கிடைக்கவில்லை; கிடைத்தால் அவைகளையும் படிக்கும் தைரியமுண்டு,' என்று கம்பீரமாகச் சொன்னேன்.

"சாதாரணமாகப் பேசிக்கொண்டு வந்த முதலி யார், நிமிர்ந்து என்னை நன்றாகப்பார்த்தார். 'நான் புஸ்தகம் தருகிறேன்; தந்தால் படித்துப் பாடம் சொல்வீர்களா?' என்று கேட்டார்.

"'அதிற்சிறிதும் சந்தேகமே இல்லை; நிச்சய மாகச் சொல்கிறேன்' என்று தைரியமாகச் சொன்

னேன். அறிவுப் பலத்தையும் கல்வி கேள்விப் பலத்தையும் கொண்டு எப்படியாவது படித்து அறிந்துகொள்ளலாம் என்ற துணிவு எனக்கு உண்டாகிவிட்டது.

"'சரி; சிந்தாமணியை நான் எடுத்து வைக்கிறேன். நீங்கள் படித்துப் பார்க்கலாம். அடிக்கடி இப்படியே வாருங்கள்,' என்று அவர் சொன்னார். நான் விடை பெற்றுக்கொண்டு வந்தேன். பார்க்கச் சென்றபோது அவர் இருந்த நிலையையும் நான் விடை பெறும்போது அவர் கூறிய வார்த்தைகளையும் எண்ணி, அவர் சாமானிய மனிதரல்லரென்றும், ஆழ்ந்த அறிவும் யோசனையும் உடையவரென்றும் உணர்ந்தேன்.

"அடுத்த ஞாயிற்றுக்கிழமை இராமசுவாமி முதலியாரிடம் போனேன். அன்று அவர் மிகவும் அன்போடு என்னை வரவேற்றார். அவரைப் பார்ப்பதை விட அவர் சொன்ன புஸ்தகத்தைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் கட்டுக்கடங்காமல் இருந்தது. அவர் தம்மிடம் இருந்த சீவக சிந்தாமணிக் கடிதப் பிரதியை என்னிடம் கொடுத்தார். 'இதைப் படித்துப் பாருங்கள். பிறகு பாடம் ஆரம்பிக்கலாமா?' என்றார். 'அப்படியே செய்யலாம்' என்று உடன்பட்டேன். பிறகு அவர் அந்தப் பிரதியைத் தாம் பெற்ற வரலாற்றைச் சொல்லத் தொடங்கினார்.

"'எனக்குச் சிந்தாமணி முதலிய பழைய புஸ்தகங்களைப் படிக்க வேண்டுமென்ற ஆவல் மிகுதியாய் இருந்தது. இந்தத் தேசத்தில் நான் சந்தித்த வித்துவான்களில் ஒருவராவது அவற்றைப் படித்ததாகவே தெரியவில்லை. ஏட்டுச் சுவடிகளும்

கிடைக்கவில்லை. திருநெல்வேலிப் பக்கத்திலுள்ள கவிராயர்கள் வீட்டில் பிரதிகள் கிடைக்கலாமென்று எண்ணி ஸ்ரீ வைகுண்டத்தில் முன்ஸீபாய் இருந்த என் நண்பர் ஏ. இராமசந்திரையர் என்பவரிடம் விஷயத்தைச் சொல்லி வைத்திருந்தேன். அவர் யார் யாரையோ விசாரித்துப் பார்த்தார்; ஒன்றும் கிடைக்கவில்லை.

"'ஒரு சமயம் ஸ்ரீ வைகுண்டத்துக்கு அருகிலுள்ள ஓர் ஊரில் பரம்பரை வித்துவான்களாய் இருந்த கவிராயர் குடும்பமொன்றில் உதித்த ஒருவர் ஒரு வழக்கில் சாக்ஷியாய் வந்தார். அவரை விசாரிக்கும் போது, அவர் கவிராயர் பரம்பரையைச் சேர்ந்தவரென்றும், அவருடைய முன்னோர்கள் பல நூல்களை இயற்றியிருக்கிறார்களென்றும் என் நண்பருக்குத் தெரிய வந்தது. விசாரணையெல்லாம் முடிந்த பிறகு முன்ஸீபு அந்தச் சாட்சியைத் தனியே அழைத்து அவர் வீட்டில் ஏட்டுச் சுவடிகள் இருக்கின்றனவா என்று விசாரித்தார். அவர், 'இருக்கின்றன' என்று சொல்லவே, சிந்தாமணிப் பிரதி இருந்தால் தேடி எடுத்துத் தரவேண்டுமென்று கூறினார். அதிகாரப் பதவியிலிருந்தமையால் அவர் முயற்சி பலித்தது. அந்தக் கவிராயர் சீவக சிந்தாமணிப் பிரதியைக் கொண்டுவந்து கொடுத்தார். அதற்கு முப்பத்தைந்து ரூபாய் கொடுத்து வாங்கி எனக்கு அனுப்பினார். அதிலிருந்து காகிதத்திற் பிரதி பண்ணிய புஸ்தகம் இது.

"'இவ்வளவு கஷ்டப்பட்டு இதனைப் பெற்றும் படிப்பதற்கு முடியவில்லை. நான் காலேஜில் படித்த போது இதன் முதற்பகுதியாகிய நாமகளிலம்பகம்

மாத்திரம் பாடமாய் இருந்தது. அதை ஒரு துரை அச்சிட்டிருந்தார். அதில் தமிழைக்காட்டிலும் இங்கிலீஷ் அதிகமாயிருந்தது. நூல் முற்றும் படித்துப் பார்க்க வேண்டும் என்ற ஆசையால் நான் போகும் இடங்களில் உள்ள வித்துவான்களை எல்லாம் விசாரித்துப் பார்க்கிறேன். எல்லோரும் அந்தாதி, பிள்ளைத் தமிழ், புராணங்கள் இவைகளோடு நிற்கிறார்களேயொழிய, மேலே போகவில்லை. அதனால், நான் மிகவும் அலுத்துப் போய்விட்டேன்.

"'புஸ்தகம் மிகச் சிறந்த புஸ்தகம் 'கம்ப ராமாயணத்தின் காவிய கதிக்கெல்லாம் இந்தக் காவியமே வழி காட்டி. இதைப் படித்துப் பொருள் செய்து கொண்டு பாடம் சொல்வீர்களானால் உங்களுக்கும் நல்லது; எனக்கும் இன்பம் உண்டாகும்.'

"முதலியார் கூறியவற்றை மிக்க கவனத்தோடு கேட்டு வந்தேன். தமிழ் நூற்பரப்பையெல்லாம் உணர்ந்து விளங்கிய பிள்ளையவர்கள்கூடச் சிந்தாமணியைப் படித்ததில்லையென்பதை நினைத்த போது, 'நாம் இந்தப் புதிய நூலைப் படித்துப் பொருள் செய்வது சுலபமாக இருக்குமா!' என்ற அச்சம் சிறிது தோற்றினாலும், 'தமிழ் நூல் மரபுக்குப் புறம்பாக இல்லாத நூல் ஏதாயிருந்தாலென்ன! ஸம்ஸ்கிருதமா, தெலுங்கா நூதனமாகப் பயிற்சி செய்துகொள்ள வேண்டும் என்பதற்கு? தமிழ் நூலை அறிவு கொண்டு ஆராய்ந்து படித்துப் பார்த்தால் விளங்காமலா போகிறது! எவ்வளவோ நூல்களைப் படித்ததாகச் சொல்லியும், என்ன பிரயோசனம் என்று ஒரு கேள்வியில் தூக்கி எறியும்படி அந்தப் புஸ்தகத்தில் என்னதான் இருக்கிறது, பார்த்து விடலாம்!' என்ற தைரியமே முன்நின்றது.

"'பிற்பாடு வருகிறேன்; இதைப் படித்துப் பார்த்துக்கொண்டே வருகிறேன்,' என்று உத்ஸாகத்தோடு சொல்லி இராமசுவாமி முதலியாரிடம் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டேன்.

* * *

"சேலம் இராமசுவாமி முதலியார் கொடுத்த சீவக சிந்தாமணிப் பிரதியைப் படிக்க ஆரம்பித்தேன். அதில் நச்சினார்க்கினியர் உரையும் இருந்தது. அது சீவகனைப்பற்றிய காவியம் என்பது மட்டும் எனக்குத் தெரிந்ததேயன்றி, இன்ன கதையை அது சொல்வது, இன்ன வகையில் அது சிறப்புடையது என்பவற்றை அறியேன். தமிழ் நூற்பரப்பை ஒருவாறு அறிந்துவிட்டதாக ஒரு நினைப்பு அதற்குமுன் எனக்கு இருந்தது. நான் கண்ட நூற்பரப்புக்குப் புறம்பேயிருந்த சிந்தாமணி எனக்கு முதலில் பணிவை அறிவுறுத்தியது.

* * *

"அந்த வாரம் சனிக்கிழமை வழக்கம்போலவே திருவாவடுதுறைக்குப்போய், இராமசுவாமி முதலியாரைச் சந்தித்தது முதல் நிகழ்ந்தவற்றையெல்லாம் சுப்பிரமணிய தேசிகரிடம் தெரிவித்தேன். கேட்ட தேசிகர் மிகவும் மகிழ்ச்சியடைந்து, 'தக்க அறிவுடைய கனவான்களது பழக்கம் ஏற்படுவது மிகவும் நல்லதுதான்; அவருக்கு ஜாக்கிரதையாகப் பாடம் சொல்ல வேண்டும்; பிள்ளையவர்கள் எழுதி வைத்த சிந்தாமணி ஏட்டுப் பிரதி ஒன்று மடத்தில் இருக்கிறது,' என்று சொல்லி அப்பிரதியை வருவித்து அளித்தார். 'முதலியாருக்குப் பாடம்சொல்லும்படியிருப்பதால் சனிக்கிழமை மட்டும் வந்து

ஞாயிற்றுக்கிழமை திரும்பிவிடலாம்,' என்று கூறி விடை கொடுத்தார்.

* * *

"அடுத்த நாள் இராமசுவாமி முதலியாரிடம் சென்று பாடம் சொல்லத் தொடங்கினேன். நாமகள் இலம்பகம் 1870-ஆம் வருஷம் பி. ஏ. பரீட்சைக்குப் பாடமாக இருந்தது. அப்போது படித்த முதலியார் தாம் பாடம் கேட்ட போது அறிந்த விஷயங்களை இடையிடையே சொன்னார். நான் பாடம் சொன்ன போது இடையில், 'கட்டியக்காரன்' என்று படித்தேன். அப்போது முதலியார், 'நாமகள் இலம்பகக் கதை மாத்திரம் எனக்குத் தெரியும்; கட்டியங்காரன் என்பதுதான் அந்தச்சொல்; சச்சந்தனுடைய மந்திரிகளுள் ஒருவன் பெயர் அது; அவன்தான் சச்சந்தனைக் கொன்றான்,' என்றார். பிறகு 'கோவிந்தன்' (சீவக சிந்தாமணி, 187, உரை) என்று ஒரு பெயர் வந்தது. அது கண்ணபிரானைக் குறிப்பதென்பதைத் தவிரச் சிந்தாமணியிலே யாரைக் குறிப்பதென்பது தெரியவில்லை. முதலியார்க்கும் அது விளங்கவில்லை. இப்படியே வேறு சில விஷயங்களும் விளங்காமலிருந்தன. எனக்கு விளங்காத விஷயங்களை விளங்கவில்லையென்று சொல்லித் தக்கவர்களைக் கேட்கவேண்டுமென்பேன். விளங்காததையும் விளங்கியதாகச் சொல்லிக் குழப்பாததை அறிந்த முதலியார் அதைப் பாராட்டுவார். நாங்கள் சிந்தாமணியைப் படித்து வந்த போது சில வித்துவான்களும் வந்திருந்து கேட்பதுண்டு. இப்படி ஐந்து மாதங்கள் சென்றன.

* * *

"இராமசுவாமி முதலியார் பாடம் கேட்டு வந்தார். அங்கங்கே சிந்தாமணி நூலின் நயத்தையும் உரை நயத்தையும் அறிந்து அவர் பாராட்டுவார்.

* * *

"இராமசுவாமி முதலியாருக்குப் பாடம் சொல்லுவதாக ஆரம்பித்த சிந்தாமணி ஆராய்ச்சி வர வர எனக்கு இன்பந்தரும் ஒரு பொழுது போக்காகிவிட்டது. காலேஜிலும் வீட்டிலும் பாடம் சொல்லும் நேரம் போகச் சிந்தாமணியைப் படிப்பதிலே ஆழ்ந்திருந்தேன்.........அந்தச் சோழ சக்கரவர்த்தியின் (அனபாயசோழ மகாராஜா) உள்ளத்தைப் பிணிக்கும் காவியரஸம் அந்த அரிய நூலில் இருப்பது உண்மையென்றே நான் உணர்ந்தேன்.

* * *

"சிந்தாமணிப் பாடத்தில் காந்தருவதத்தையாரிலம்பகத்தில் பாதி நடந்திருந்தது. அக்காலத்தில் முதலியார் தம் வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டு ஒரு கட்டுப்பாடுமின்றி வாழவேண்டுமென்றும் சென்னைக்குச் சென்று வக்கீலாக இருக்கலாமென்றும் எண்ணிக் குடும்பத்துடன் புறப்பட்டார். புறப்படும் காலத்தில் என் வீட்டுக்கு வந்தார்; 'சிந்தாமணியின் பெருமையை நீங்கள் இப்போது நன்முக உணர்ந்திருக்கிறீர்கள். இந்த அருமையான காவியம் படிப்பாரற்று வீணுகப் போகாமல் நீங்கள் பாதுகாக்க வேண்டும். இன்னும் சில பிரதிகள் சம்பாதித்து நீங்களே அச்சிட்டு வெளிப்படுத்த வேண்டும். அதைப் போன்ற உபகாரம் வேறு ஒன்றும் இல்லை,' என்று சொன்னுர். நான், ,என்னுல் இயன்ற அளவு முயன்று அப்படியே

செய்கிறேன்,' என்று வாக்களித்தேன். அவர் விடை பெற்றுச் சென்றார்.

* * *

"சேலம் இராமசாமி முதலியார் சென்னைக்குச் சென்று எனக்குக் கடிதங்கள் எழுதினார். சீவக சிந்தாமணி ஆராய்ச்சியைத் தொடர்ந்து நடத்த வேண்டுமென்று ஒவ்வொரு கடிதத்திலும் வற்புறுத்தினார். நான் அவ்வாறே படித்து ஆராய்ந்து வருவதைத் தெரிவித்தேன்.

* * *

"சிந்தாமணியைப் போலத் தமிழ் நாட்டில் வழங்காத வேறு நூல்கள் என்ன என்ன உள்ளன என்ற ஆராய்ச்சியிலே என் மனம் சென்றது. இராமசுவாமி முதலியார் சென்னைக்குப் போகும் போது என்னிடம் சிலப்பதிகாரப் பிரதியைக் கொடுத்துச் சென்றார். சென்னைக்குச் சென்ற பிறகு நான் கேட்டுக்கொண்டபடி மணிமேகலைப் பிரதியை அனுப்பினார்.

* * *

"அடிக்கடி தியாகராச செட்டியார், சேலம் இராமசுவாமி முதலியார் முதலிய அன்பர்கள் எனக்குக் கடிதம் எழுதுவார்கள். அவர்களுடைய கடிதங்கள் நேரில் பழகிப் பேசுவதைப் போன்ற இன்பத்தை உண்டாக்கும்.

* * *

"இந்த நிலையில் எனது சிந்தாமணி ஆராய்ச்சி நன்றாக நடந்து வந்தது. இன்ன இன்ன பகுதிகளைப் படித்தேனென்று இராமசுவாமி முதலியாருக்கு எழுதுவேன். அவர் மிக்க சந்தோஷத்தைத்

தெரிவித்து விடை எழுதுவார். 1880-ஆம் வரு அக்டோபர் மாதம் 30-ஆம் தேதி எழுதிய கடிதம் ஒன்றில் '......... சிந்தாமணி முழுவதும் ஒரு விசை தாங்கள் பார்த்ததாகவும் அதில் சில சந்தேகங்கள் இருப்பதாகவும் தங்கள் கடிதத்தால் தெரிய வருகிறது. மறுபடி ஒரு விசை பார்க்கும் பக்ஷத்தில் சந்தேகங்கள் ஏறக்குறைய முழுவதும் தீர்ந்து விடுமென்று எனக்குத் தோற்றுகிறது. தங்களுடன் மறுபடியும் அந்தப் புஸ்தகத்தைப் படிக்க எனக்கு எப்பொழுது உதவுமோ கடவுளுக்குத்தான் தெரியும். ஆகிலும் இருவரும் ஒரு விசை படிப்போமென்ற நம்பிக்கை மாத்திரம் இருந்துகொண்டேயிருக்கிறது,' என்று தெரிவித்திருந்தார். அதனால், அவருக்குச் சிந்தாமணியிலுள்ள விருப்பமும் என்பாலுள்ள அன்பும் புலப்பட்டன. 'சென்னைக்குச் சென்று முதலியாரோடு சில காலம் இருந்துவர வேண்டும்,' என்ற ஆவல் எனக்கு உண்டாயிற்று.

* * *

"அது வரையில் சென்னையையே பார்த்திராத எனக்கு அந்த நகரத்துக்குப்போய் ஆங்குள்ள அறிவாளிகளோடு பழகவேண்டுமென்ற விருப்பம் இருந்தது. அன்றியும் சேலம் இராமசுவாமி முதலியாரைக் கண்டு சிலகாலம் உடனிருந்து சிந்தாமணியைப் படித்துக்காட்ட வேண்டுமென்ற ஆவலும் உண்டு.

* * *

"ஒரு நல்ல நாளில் புறப்பட்டு ... சென்னைக்குச் சென்றேன்... இராமசுவாமி முதலியார் பங்களாவில் தங்கினேன்.

* * *

"சென்னையில் நான் இரண்டு வாரங்களுக்குமேல் தங்கியிருந்தேன்.........என்னுடைய நோக்கம் அந் நகரத்தையும் அங்குள்ள அறிஞர்களையும் பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டுமென்பதே. இராமசுவாமி முதலியாருடைய பேருதவியால் அந்நோக்கம் மிக எளிதில் கை கூடியது.

"ஒவ்வொருநாளும் முதலியார் பிற்பகலில் தம் கோச்சு வண்டியில் என்னை அழைத்துக்கொண்டு புறப்படுவார். பிரஸிடென்ஸி காலேஜ், காஸ்மொ பாலிட்டன் கிளப் முதலிய இடங்களுக்குப் போய் அங்குள்ளவர்களும் வருபவர்களுமாகிய கனவான் களில் ஒவ்வொருவரையும் எனக்குப் பழக்கம் பண்ணி வைப்பார். அவர்கள் கௌரவத்தை என்க்கு எடுத் துரைப்பதோடு என்னைப்பற்றியும் அவர்களிடம் சொல்வார். அவருடைய உதவியினல் நான் ஜட்ஜ் முத்துசாமி ஐயர், ஸர். வி. பாஷ்யமையங்கார், ஸ்ரீநிவாசராகவையங்கார், பம்மல் விஜயரங்க முதலி யார், ரகுநாதராயர் முதலிய பல கனவான்களுடைய பழக்கத்தைப் பெற்றேன். பிரஸிடென்ஸி காலேஜிற் குச் சென்று பூண்டி அரங்கநாத முதலியாரையும், தொழுவூர் வேலாயுத முதலியாரையும் பார்த்தேன். அவ்விருவரும் எனக்கு மிகவும் நெருங்கிய நண்பர்க ளானர்கள்.

"வர்ஞகுலர் சூபரிண்டெண்டெண்டு சேஷகிரி சாஸ்திரியாரையும் தமிழ்ப் பண்டிதர் கிருஷ்ணமா சாரியாரையும் கண்டு பேசினேன். புரசபாக்கம் அஷ்டாவதானம் சபாபதி முதலியார், சோடசாவ தானம் சுப்பராய செட்டியார், கதிற்வேற்கவிராயர், காஞ்சீபுரம் இராமசுவாமி நாயுடு, கோமளீஸ்வரன்

பேட்டை இராசகோபாலப் பிள்ளை, ஶ்ரீ அப்பன் செட்டியார், ஶ்ரீ சோமசுந்தர நாயகர், திருமயிலை சண்முகம் பிள்ளை முதலிய வித்துவான்களைப் பார்த்துப் பேசி இன்புற்றேன். அஷ்டாவதானம் சபாபதி முதலியார் ஸ்ரீமீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்களுடைய சகபாடியாதலின், அவருடைய புலமையைப் பற்றிப் பேசினார். சோடசாவதானம் சுப்பராய செட்டியார் தாம் பிள்ளையவர்களிடம் பாடம் கேட்ட விஷயத்தையும் அப்புலவர் பிரானுடைய சிறப்புக்களையும் எடுத்துச் சொன்னார்.

* * *

"சேலம் இராமசுவாமி முதலியாருடைய தந்தையாராகிய கோபாலசாமி முதலியாரென்பவர் அப்பொழுது சேலத்திலிருந்து சென்னைக்கு வந்திருந்தார். அவர் நான் சுப்பராய செட்டியார் வீட்டில் தங்கியிருத்தலை அறிந்து தம்முடைய பங்களாவிலேயே ஜாகை வைத்துக்கொள்ளலாமென்று எனக்குச் சொல்லியனுப்பினர். அவர் சொன்னபடியே நான் அங்கே சென்று வெளியறையொன்றில் தங்கியிருந்தேன்.

"சிந்தாமணியை அச்சுக்குக் கொடுக்க ஒரு நல்ல நாள் பார்த்து நல்ல வேளையாகிய அன்று பிற்பகல் மூன்று மணிக்கு அச்சுக்குக் கொடுக்க வேண்டிய பாகத்தைக் கையிலெடுத்துக்கொண்டு நானும் சுப்பராய செட்டியாரும் சேலம் இராமசுவாமி முதலியார் பங்களாவிலிருந்து புறப்பட்டோம். கோபாலசுவாமி முதலியார் எங்களை அனுப்பும்பொருட்டு உடன் வந்து பங்களா வாசலில் நின்றார். அப்போது சிறு தூற்றல் தூறிக்கொண்டிருந்தது. 'தூறுகிறது போலிருக்கிறதே!' என்று சுப்பராய

செட்டியார் சிறிது தயங்கி நின்றார். நான், 'சிறு தூறல் நல்லதுதான்; குற்றமில்லை; புறப்படலாம்,' என்று சொல்லவே புறப்பட்டோம்.

"செல்லுகையில் பங்களாவின் புறவாயிலிலிருந்து ஒரு மனிதன் தன்கையில் வஸ்திரத்தால் மூடிய ஒரு பெரிய வெள்ளித் தாம்பாளத்தை எடுத்துக் கொண்டு பங்களாவை நோக்கி வந்தான். நாங்கள் நெருங்க நெருங்க, அவன் அதன் மேலே இருந்த வஸ்திரத்தை எடுத்துவிட்டான். அந்தத் தாம்பாளத்தில் கிச்சிலி முதலிய பழங்கள் இருந்தன. அவற்றின் மேல் என்பார்வை விழுந்ததோ இல்லையோ எனக்குப் புளகாங்கிதம் உண்டாயிற்று. அதே சமயத்தில் பின்னே நின்று எங்களைக் கவனித்த கோபாலசுவாமி முதலியார், 'நல்ல சகுனமாகிறது! உத்தேசித்த காரியம் நன்றாக நிறைவேறும்! பழம் வருகிறது. உங்கள் முயற்சி பலனைப்பெறும்.. கவலையின்றிப் போய் வாருங்கள்,' என்று சொல்லிவிட்டு அந்த மனிதனைப் பார்த்து, 'அடே, அதில் இரண்டு பழங்கள் அவர்களிடம் கொடு,' என்று உத்தரவு செய்தார். கையில் பழங்கிடைத்தபோது நான் என்னையே மறந்தேன். 'கடவுள் திருவருள்' என்று எண்ணிச் சென்றோம்.

* * *

"இப்படி இருக்கையில் வெளியூர் சென்றிருந்த சேலம் இராமசுவாமி முதலியார் திரும்பி வந்தார். சிந்தாமணியில் பதிப்பித்திருந்த பகுதிகளைக் கண்டு அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவர் என்னை அழைத்துச் சென்று சில கனவான்களுடைய பழக்கத்தைச் செய்வித்தார்.

  

"1886-ஆம் வருஷம் ஜூலை மாதத்தில் ஹிந்து பத்திரிகையில் ஒரு கடிதம் வெளி வந்தது. அதில் 'சாமிநாதையர் சிந்தாமணியை உரையுடன் பதிப்பிப்பதாகத் தெரிகிறது. அது நச்சினார்க்கினியரது உரையாக இருந்தால்தான் தமிழ் நாட்டினரால் ஏற்றுக்கொள்ளப்படும். சாமிநாதையர் உரையாக இருந்தால் பயன்படாது!' என்ற கருத்து இருந்தது. எழுதினவர் தம் பெயரை வெளியிடாமல் புனைபெயர் பூண்டிருந்தார். அது வரையில் பாராட்டுக்களையே கேட்டு வந்த எனக்கு அக்கடிதம் சிறிது வருத்தத்தை உண்டாக்கிற்று. 'நச்சினார்க்கினியரது உரையோடு வெளியிடுவதாகத் தனிப் பிரசுரத்தால் தெரிவித்திருப்பதோடு அவ்வப்போது பத்திரிகைகளிலும் அறிவித்து வருகிறோம். அப்படியிருக்க ஒன்றும் தெரியாதவர்போல இப்படி எழுதிவிட்டவர் ஏதோ கெட்ட நோக்கமுடையவராகத்தான் இருக்க வேண்டும்,' என்று ஊகித்துக்கொண்டேன். என் ஊகம் சரியே என்பது பிறகு தெரியவந்தது.

"அந்தக் கடிதத்திற்குப் பதில் எழுதுவது அவசியமென்று நண்பர்கள் வற்புறுத்தினார்கள். நானே எழுதுவதைவிட வேறு தக்க ஒருவரைக் கொண்டு எழுதுவித்தல் நலமென்று தோற்றியபடியால் உடனே சென்னையிலிருந்த இராமசுவாமி முதலியாருக்கு ஒரு கடிதம் எழுதித் தெரிவித்தேன். அவர் சிறிதும் தாமதமின்றி, 'சீவக சிந்தாமணி மிகப் பழைய காவியம். அதைப் பல பிரதிகளைக்கொண்டு சோதித்து உழைத்து ஆராய்ந்து நச்சினார்க்கினியர் உரையுடனேதான் சாமிநாதையர் பதிப்பித்து வருகிறார். அந்த நூல் வெளி வந்தால் தமிழ் நாட்டுக்கு மிக்க உபகாரமாக இருக்கும்,' என்னும் கருத்து

அமையத் தம் கையெழுத்திட்டு ஒரு கடிதம் எழுதி அதை ஹிந்து பத்திரிகையில் 5-8-1886-ஆம் தேதியில் வெளி வரச் செய்தார்.

* * *

"கோடை விடுமுறைக்குப் பின் கும்பகோணத்திற்கு வந்த நான், அங்கிருந்தபடியே பதிப்பை நடத்திக்கொண்டிருந்தாலும், எதிர்பார்த்தபடி வேலை வேகமாக நடைபெறவில்லை. அடிக்கடி இராமசுவாமி முதலியார் கடிதம் எழுதுவார். 'நீங்கள் இங்கே வந்திருந்து நடத்தினால் வேலை துரிதமாக நடைபெறும்,' என்று அவர் ஒரு சமயம் எழுதினார். ஆகையால், கிருஸ்துமஸ் விடுமுறையில் மீண்டும் சென்னைக்குச் செல்ல ஏற்பாடு செய்தேன்.

* * *

"சேலம் இராமசுவாமி முதலியாரை ஒவ்வொரு நாளும் கண்டு சல்லாபம் செய்து மகிழ்வேன்.

* * *

"நூலைப்பற்றிய செய்திகளை எழுதிவிட்டு அதனை ஆராய்ந்து பதிப்பித்தது சம்பந்தமான செய்திகளையும், எனது அன்பிற்சிறந்த ஸ்ரீ சேலம் இராமசாமி முதலியார் சிந்தாமணி பதிப்பிக்கும்படி என்னைத் தூண்டியதையும், பிரதி அளித்ததையும், வேறு பல பிரதிகள் கிடைத்ததையும் குறிப்பித்தேன்.

* * *

"மறுநாள் ஞாயிற்றுக்கிழமை பைண்டர் மாதிரிக்காக ஒரு பிரதியைப் பைண்டு செய்து கொடுத்தார். அதைக் கையில் எடுத்துக்கொண்டு இராமசுவாமி முதலியாரிடம் சென்றேன்.

“அவரிடம் புஸ்தகத்தைக் காட்டினபோது அவர் அடைந்த ஆனந்தம் இவ்வளவென்று சொல்லி முடியாது. ‘பெரிய காரியத்தை மேற்கொண்டு நிறைவேற்றிவிட்டீர்கள்! இனி, சிலப்பதிகாரம் முதலியவற்றையும் இப்படியே அச்சிட்டுப் பூர்த்தி செய்ய வேண்டும்,’ என்று சொன்னார்.

* * *

“சேலம் இராமசுவாமி முதலியார் சென்னையிலுள்ள கையொப்பக்காரர்களிடமிருந்து பணம் தொகுத்து, திருவல்லிக்கேணி விசுவநாத சாஸ்திரியாரிடம் நான் வாங்கியிருந்த கடனைத் தீர்த்து விட்டார்.

* * *

“அவருக்குப் பணம் கொடுத்துவிட்ட விஷயத்தை முதலியார் எனக்கு எழுதிய போது என் தலையிற் சுமந்திருந்த பெரும்பாரம் நீங்கியது போன்ற ஆறுதலை அடைந்தேன்.

* * *

“மறுநாள் நானும் கிருஷ்ணையரும் சென்னையை அடைந்து சேலம் இராமசுவாமி முதலியார் பங்களாவில் தங்கினோம். அவர் அப்போது அலகாபாதுக்குப் போயிருந்தார்.

* * *

“முதல் முதலாக எனக்குச் சேலம் இராமசுவாமி முதலியார் சிலப்பதிகாரம் மூலமும் உரையுமடங்கிய கடிதப் பிரதி ஒன்று கொடுத்தார்.”

* * *

உண்மையின்—உணர்ச்சியின் — உயிரோவியங்களாய் விளங்கும் மேற்கண்ட வாசகங்களைப் படிக்கும்போது பெரியார் இராமசுவாமி முதலியாரின்

நிகரற்ற தமிழ்ப் பற்றும் பெருந்தகைமையும் விளங்கும். அவ்வாறே அவர்கள்பால் ஐயரவர்கள் கொண்டிருந்த பெருமதிப்பும் நன்றியுணர்வும் புலனாகும்.

இவ்வாறு சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை முதலான அரும்பெருந்தமிழ்ச் செல்வங்களை எல்லாம் தேடி ஆராய்ந்து டாக்டர் ஐயரவர்கள் தமிழருக்கு உதவுமாறு ஒளி காட்டிய சேலம் இராமசாமி முதலியாரை மறந்தால் தமிழகம் உய்யுமோ?

இலக்கியத் துறையில் மிகுந்த ஈடுபாடு கொண்டு விளங்கிய திரு. இராமசாமி முதலியார் அரசியல் துறையில் ஈடுபட்டு அரும்பணிகள் ஆற்றலாயினர். அவர் வாழ்க்கை வரலாற்றை அழகுற எழுதியுள்ள கட்டுரையாளர் ஒருவர் கூறுவதுபோல 'அந்நாளில் தென்னிந்தியாவில் அவரைப்போல நாட்டு மக்களின் நலத்தில் கண்ணும் கருத்துமாய் இருந்தவர் எவருமில்லை'. முதல் முதலாக அரசியல் உலகில் அவர் தம் ஆற்றலைக் காட்டியது 1882-ஆம் ஆண்டில். இந்த ஆண்டிலேதான் சென்னை நிர்வாக சபையிலிருந்து[10] ஓய்வு பெறும் ஒரு வெள்ளையர்க்கு நினைவுச் சின்னம் எழுப்புவதைப் பலமாக எதிர்த்து, திரு. முதலியார் அவர்கள் பெருங்கிளர்ச்சியைச்செய்தார். நாட்டை அடிமைப்படுத்தி ஆள வந்த வெள்ளையர்க்கு நினைவுச் சின்னம் எழுப்புவதை முதன்முதலாக எதிர்த்தவர் திரு. முதலியார்.

அந்நாளில் பொதுநல ஆக்கத்திற்காகச் சென்னை மாநகரில் மகாஜனசபை பெருங்கிளர்ச்சி புரிந்து வந்தது. உண்மையில் பின்னாளில் காங்கிரஸ்

ஸ்தாபனம் செய்த வேலைகளை எல்லாம் அந்நாளில் திறம்பெற ஆற்றியது மகாஜன சபையே. அச் சபையின் மூலபலமாய் விளங்கினார் சேலம் இராம சாமி முதலியார். மகாஜனசபையார் நடத்திய உரிமை இயக்கம், பரந்த நோக்கமும் தேசியப் பண்பும் நிறைந்ததாய் விளங்கியதற்குத் திரு. இராமசாமி முதலியாரே காரணம். திரு. முதலியார் அவர்கள் சிறிதும் தன்னலமற்றவர். ஒரு முறை சேலத்தில் ஏற்பட்ட விவசாயக் கலவர வழக்குகளில் அரசாங்கம் அவர் தந்தையாரை வேண்டுமென்றே ஈர்த்துப் பிணித்தது. ஆனால், தந்தையார்பொருட்டு வாதாடி வெற்றி பெறுவதினும் வேறு பெரிய காரி யங்கட்காகத் தம் ஆற்றலைச் செலவழிப்பதே நேர்மையானது-சத்தி வாய்ந்தது-எனக்கருதித் திரு. முதலியார் அந்த வழக்கில் கட்சியாட மறுத்து விட்டார்.

சேலம் இராமசாமி முதலியாரின் அரசியல் வாழ் வின் மணி முடியாய் விளங்கத் தக்கது அவருடைய இங்கிலாந்துப் பயணமே. 19-ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் இந்திய தேசியவாதிகள் தங்கள் விடு தலை வேட்கையைப் புலப்படுத்த வல்லமை பொருந் திய ஒரு வழியைத் தேடலானார்கள். அதன் விளை வாக, தேச பத்தியும் நாவன்மையும் நிறைந்த இவரை இங்கிலாந்திற்கு அனுப்ப வேண்டும் என்றும், தங்கள் குறைகளை அப்போது (1885ல்) பிரிட்டனில் நடந்த பொதுத் தேர்தலில் கலந்து கொள்ளும் இங்கிலாந்து தேச மக்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டும் என்றும், அதுவாயிலாக இந்தியா வின் குரலைப் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் எழுப்பக் கூடிய நல்லவர்கள் வெற்றி பெறச் செய்யவேண்

டும் என்றும் முடிவு கட்டினார்கள். அதன் பயனாகப் பொறுப்பு வாய்ந்த இந்தத் தேசப் பணிக்கு அந் நாளைய பாரத நாட்டுத் தேச பத்தர்கள் மூன்றே பேரை ஒரு மனமாகத் தேர்ந்தெடுத்து அனுப்பினார்கள். அவர்களுள் ஒருவரே சென்னையின் பிரதிநிதியாகச் சென்ற சேலம் இராமசாமி முதலியார். **ஆம். இந்தியாவின் விடுதலை வேட்கையை இங்கிலாந்து சென்று அங்குள்ள மக்களுக்கு எடுத்துரைத்த முதற் பெருந்தமிழர் முதலியாரே.**

இங்கிலாந்தில் பல்வேறு கூட்டங்களிலும் திரு. இராமசாமி முதலியார் தம் தோழர்களுடன் சேர்ந்து வீர முழக்கம் செய்தார்; அந்நாளில் இங்கிலாந்தின் புகழ் வாய்ந்த பெருமக்களாய் விளங்கிய **பிரைட்டு**[12] **சேம்பர்லின்,**[13] **கிளாட்ஸ்தன்**[14] முதலியோரோடு தொடர்பு கொள்ளும் பேறும் பெற்றார். திரு. முதலியாரின் வருகையை நன்கு பயன்படுத்த விரும்பினர், அறிஞர் பெருமக்களாகிய டாக்டர் W. A. **ஹன்டரும்,**[15] பேராசிரியர் **பிரைசும்.**[16] திரு. இராமசாமி முதலியாரின் துணைகொண்டு **கிரானைட்சிட்டி**[17] என்ற பெயரால் இந்தியாவைப்பற்றிய அறிவு விளக்கம் பெறுதற்குரிய பேரவை ஒன்றை நிறுவினர்.

திரு. இராமசாமி முதலியாரின் சொற்பொழிவுகளால் இங்கிலாந்து தேச மக்கள் பாரத நாட்டுக்கு ஆற்றவேண்டிய கடமைகளை நன்கு உணர்ந்தார்கள். திரு. முதலியார் அவர்களின் உருவமும், குரலும், உடையும், நடையும் ஆங்கில மக்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தன. 'அழகிய முகம், கரிய பெரிய விழிகள், செதுக்கிவிடப்பட்ட சிற்பச்சிலை போன்ற அமைப்புகள் பொருந்திய திருவுருவம்' என்

றெல்லாம் ஆங்கில மக்கள் அவர் பொலிவைக்கண்டு புகழ்ந்தார்கள். திரு. இராமசாமி முதலியாரின் ஆங்கிலச் சொற்பொழிவுகள் இங்கிலாந்து மக்களின் உள்ளத்தை உருக்கின. அவர் குரலிலே அந்நாட்டு மக்கள் அறிவின் தெளிவையும், நெஞ்சின் உறுதியையும், ஒழுக்கத்தின் உயர்வையும் ஒரு சேரக் கண்டார்கள். திரு. முதலியார் அவர்களும் தம் பணிகளை வெற்றிகரமாக முடித்து இந்தியாவிற்கு மீண்ட பொழுது சொற்பொழிவுக் கலையில் முன்னினும் பன்மடங்கு வல்லவராய் மீண்டார்.

திரு. முதலியார் அவர்கள் தம் இங்கிலாந்து பயணத்தின் போது காந்தியடிகளைவிடக் கண்டிப்பாகத் தம் இந்துமத நெறிப்படி வாழ்க்கை நடத்தினார்; இந்து சமையற்காரன் ஒருவனை உடனழைத்துச் சென்றார்; இந்துவாகச் சென்று இந்துவாகவே மீண்டார். அதனால் அவர் திரும்பியதும் 'பிராயச்சித்தம்' என்ற வேதனையை வைதிக உலகம் அவருக்குப் பரிசாக வழங்கவில்லை.

திரு. முதலியார் அவர்கள் இந்தியாவின் விடுதலைக் குரலை இங்கிலாந்தின் எட்டுத் திக்குகளிலும் திறம்பட எடுத்துரைத்து வாகை சூடித் தமிழகத்தின் தலை நகர்க்குத் திரும்பிய போது சென்னைக் கடற்கரையில் அவரை மக்கட்கடல் ஆரவார அலை எழுப்பி அகமுகமகிழ வரவேற்றது. பின்னர் அவர் பிறந்தகமாகிய சேலமும் அவர் வருகையைப் போற்றிப் பூரித்தது.

இங்கிலாந்தினின்றும் திரும்பிய திரு. இராமசாமி முதலியார் நாட்டின் நலங்கருதி முன்னினும் தீவிரமாய் ஓய்வின்றி உழைக்கலானார். 1886-ஆம்

ஆண்டில் பொதுமக்களின் பெருங்கிளர்ச்சிக்குப் பின் அரசாங்க உத்தியோகங்கட்கு நியமனங்கள் செய்யும் பொது அலுவல் நியமனக் குழு ஏற்பட்டது. அக் குழுவில் உத்தியோகப் பற்றற்றாரின் பிரதிநிதி யாகத் திரு. முதலியார் நியமனம் பெற்றார். ஆம். முதல் முதலாக ஏற்பட்ட அக்குழுவில் முதல் முத லாக இடம் பெற்ற தென்னிந்தியர்—பெருந்தமி ழர்—திரு. இராமசாமி முதலியார் அவர்களே.

திரு. இராமசாமி முதலியார் தேசிய உணர்ச்சி மிக்கவர்; காங்கிரஸ்மகாசபையை ஆதி நாளில் பேணி வளர்த்த பெருமக்களுள் ஒருவர். ஆனால், அந்த வரலாற்றைத் தமிழகம் இன்று அறியுமோ? திரு. இராமசாமி முதலியார் 1887ல் சென்னையிலும் பின்னர் அலகாபாதிலும்[19] நடைபெற்ற காங்கிரஸ் மாநாடுகளிற் கலந்துகொண்டார். சென்னை யில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டிற்குத் தம் பப்ளிக் சர்விஸ் கமிஷன் அலுவல்களை எல்லாம் முடித்துவிட்டு, கல்கத்தாவிலிருந்து ஓடோடியும் வந்து கலந்துகொண்டார். சென்னைக் காங்கிரஸில் ஏகாதிபத்தியம் அந்நாளில் கொண்டுவந்த ஆயுதச் சட்டம் பற்றிய தம் ஆணித்தரமான கருத்துக் களைப் பறை சாற்றினார். திரு. முதலியார் அவர்கள் காங்கிரஸோடு தொடர்பு கொண்ட சில ஆண்டுகளி லேயே அவர் மேதையை அகில இந்தியத் தலை வர்களும் ஒரு மனமாக உணர்ந்தார்கள். அது கார ணமாக அகில இந்தியக் காங்கிரசின் தலைமைப் பதவியையே அவருக்களிக்க ஒரு முறை எல்லாத் தலைவர்களும் விரும்பினார்கள். ஆயினும்,பெறற்கரிய அரும்பெரும்பேற்றினையும் தம் அடக்கம் காரண மாக ஏற்கத் தயங்கி மறுத்துவிட்டார் திரு. முதலி

யார். பட்டமின்றிப் பதவியின்றிப், பரிசுகளின்றித் தேசியக் காங்கிரஸ் வாயிலாகப் பாரதத்தாயின் விடுதலைக்குத் தம்மை அர்ப்பணிக்கத் துணிந்தார் சேலம் தந்த சான்றோர் இராமசாமி முதலியார்.

திரு. முதலியார் அவர்கள் ஜனநாயக உணர்ச்சியில் தலை சிறந்தவர். சென்னை நகர நிருவாகக் குழுவில் உறுப்பினராய் விளங்கி அவர் ஆற்றிய பணிகள் அளவிடற்கரியன. அவர்தம் தோழர்கள் மேற்கொண்ட பெருமுயற்சிகளின் விளைவே 1893ல் ஏற்பட்ட இந்திய நகராண்மைக் கழகங்களின் சட்டம். அச்சட்டத்தைப் பயன்படுத்தி அவரைச் சென்னை நகர் மன்றக் குழுவின் சார்பாகச் சென்னை மேல் சபைக்குத் தேர்ந்தெடுக்க நண்பர் பலர் திட்டமிட்டிருந்தனர். ஆனால், அந்தோ! அலைகடலுக்கும் அப்பால் சென்று இந்தியாவின் விடுதலைக் குரலை ஆளும் சாதியாரும் வியந்து மனம் நெகிழ முழங்கிய அம்மாமேதையின் மூச்சைக் கருணையின்றிக் காலன் அடக்கி ஒடுக்கிவிட்டான்! திரு. இராமசாமி முதலியார் தம் 40-ஆம் வயதிலேயே காலமானார். என்னே தமிழினத்தின் தவக்குறை!

இக்குறை உணர்ந்து உள்ளம் குமுறிய சான்றோர் பலர். அவருள் சிறப்பாகக் குறிக்கத்தக்க பெரியார் பெரும்புலவர் சாமிநாத ஐயர். பெருந்தகை திரு. முதலியார் அவர்களின் மீளாப்பிரிவு குறித்து ஐயரவர்கள் தம் 'என் சரித்திரத்தி'ல் இருவிழிகளும் நீர் சோர வரைந்துள்ள வாசகங்கள் வருமாறு: [20]

“.........அக்காலத்தில் என் அரிய நண்பரும் பேருபகாரியுமாகிய சேலம் இராமசாமி முதலியாரை இழக்கும் துர்ப்பாக்கியம் இத்தமிழ்

நாட்டிற்கு நேர்ந்தது. 1892-ஆம் வருஷம் மார்ச்சு மீ இரண்டாம் தேதி அவர் உலக வாழ்வை நீத்தார். அந்தத் துக்கச் செய்தியைக் கேட்டு நான் துடிதுடித்துப் போனேன்! அவருடைய பழக்கம் எனக்கு ஏற்பட்டதையும் அதனால் பழந்தமிழ் நூலாராய்ச்சியிலே நான் புகும்படி நேர்ந்ததையும் எண்ணிப் பார்த்தேன். அவருடைய தூண்டுதல் இராவிட்டால் சிந்தாமணியை நான் அச்சிடுவது எங்கே! சங்க நூல்களின் பெருமையை உணர்ந்து இன்புற்று வெளிப்படுத்தும் முயற்சிக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்! துக்க உணர்ச்சியோடு சில பாடல்களை எழுதினேன்.[21]

"சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் இரண்டையும் புத்தக வடிவத்திற் பார்க்கவேண்டுமென்று முதலியார் எவ்வளவோ ஆவலோடிருந்தார். அவர் இருந்த காலத்தில் அவ்விரண்டையும் நிறைவேற்றும் பேறு எனக்கு இல்லாமற்போயிற்று!"

திரு. இராமசாமி முதலியாரின் வாழ்க்கை வரலாற்றை அழகொழுகும் சொல்லோவியமாக ஆங்கிலத்தில் அறுபது ஆண்டுகட்குமுன் சுருங்க வரைந்துள்ள அறிஞர் திரு. பரமசிவம் பிள்ளை திரு. முதலியார் அவர்களின் அரிய பண்பு நலன்[22] பற்றிக் கூறியுள்ளதன் தமிழாக்கம் வருமாறு:

"திரு. முதலியார் எளிமையும் நேர்மையும் உண்மையும் உருவாய்க் கொண்டவர்; அடக்கம் நிறைந்தவர்; கோழையல்லர்; கருணை மிக்கவர்; ஆனால், கண்டிப்பு நிறைந்தவர்; சுதந்தர உள்ளம் படைத்தவர்; ஆனால், பிறருக்காக மனமார விட்டுக் கொடுக்கும் பண்பு நலம் வாய்ந்தவர். சுருங்கச் சொன்னால், தயவும் திடமும், உருக்கமும் உறுதியும் நிறைந்த உத்தமர் அவர் என்னலாம்."

திரு. இராமசாமி முதலியாரின் மறைவால் தமிழகத்திற்கும் பாரத நாட்டிற்கும் ஏற்பட்ட இழப்பு அன்றும் இன்றும் என்றும் ஈடு செய்ய ஒண்ணாதது. திரு. முதலியாரின் மீளாப்பிரிவால் இந்து சமுதாயம் அப்பழுக்கற்ற ஒரு பெருந்தகையை இழந்தது. தேசபக்தர் உலகம் தலை சிறந்த ஒரு பேரறிஞரை இழந்தது. தமிழ் அறிவாளர் உலகம் தன்னிகரற்ற ஒரு மேதையை இழந்தது. அனைத்திற்கும் மேலாகப் பாரத அன்னை தன் மணி முடியில் போற்றிப் புனைந்திருந்த அரியதொரு தமிழ் இரத்தினத்தை இழந்தாள்.

சேலம் இராமசாமி முதலியார் மறைந்து 66 ஆண்டுகட்கு மேலாகின்றன. ஆயினும் அவர் நினைவைத் தமிழகம் தக்கவாறு போற்ற மறந்துவிட்டது. மொழி வழி ஆட்சி நடத்தும் பேறு பெற்றுள்ள இன்றைய தமிழகமேனும் அக்குறைகளையத் துணியுமோ? திரு. முதலியார் பிறந்த சேலமாநகரிலும், அவர் வாழ்ந்து பெருமை பெற்ற சென்னைமாநகரிலும் அவர்கட்கு நன்றியுணர்ச்சியுடைய தமிழ் மக்கள் தக்க நினைவுச் சின்னம் எழுப்புதல் வேண்டும். நம் இனத்தின் பெரியோர்களை நாமே போற்றாவிடின், வேற்றினத்தார் போற்றுவது எங்ஙனம்?

**வாழ்க திரு. இராமசாமி முதலியாரின் வான்புகழ்!**

## அடிக்குறிப்புகள்



### I. அறப்போர் அண்ணல்

1. *பார்க்க: குமரி மலர் (டிசம்பர்—1944) பக்கம்-9*
2. *பார்க்க: வேலூர்ப் புரட்சி —ந. சஞ்சீவி*
3. *பார்க்க: வீரத் தலைவர் பூலித்தேவர் —ந. சஞ்சீவி*
4. *பார்க்க: சுதந்திரச் சுடர், பக். 188*

5, 6. *பார்க்க: கலைக்களஞ்சியம், தொகுதி-1, பக். 572; தொகுதி-3, பக். 489.*

7. Native Association Society's School
8. Madras Native Association
9. E. B. Thomas
10. Sir. William Burton
11. J. F. Thomas
12. Morehead
13. Lewin
14. Native circulator
15. Crescent
16. Harley
17. Record

18, 25, 25-A. *பார்க்க:* Pachaiyappa's College Centenary Commemoration Book, Page-37—43, 197.

19. Danby Seymour
20. East India Company
21. Wood
22. Parliament
23. Earl of Abbemarle
24. John Bright

25. 25-A. *பார்க்க: அடிக்குறிப்பு–18*

26. Companionship of the Star of India
27. Sir. Salar Jung.

## II. முதற்பெருந்தமிழர்

1. Madras High School
2. F. A.
3. B. A.
4. M. A.
5. B. L.
6. Holloway
7. Law Journal
8. Pachaiyappa's Trust Board
9. *என் சரித்திரம், பக். 726—34; 737—8; 741; 744—5; 751; 762; 771—2; 775—7; 780; 797—8; 807; 812—3; 814; 815; 838; 855; 862; 917; 919; 920; 969—70.*
10. A retiring councillor, Mr. D. F. Carmichael
12. John Bright
13. Chamberlain
14. Gladstone
15. Dr. W. A. Hunter
16. Bryce
17. 'Granite city'
19. *பார்க்க: (1) என் சரித்திரம்—பக். 905*

20, 21. *பார்க்க: (1) என் சரித்திரம்—பக். 966-70*

*(2) கட்டுரையின் முகப்பில் உள்ள பாடல்கள்*

*(3) இப்பாடல்களில் மூன்றாவது பாடலின் சரியான வடிவம் வருமாறு:*

ஊர்க்குழைப்பான் போனானென் றுலைவாரும் போனானிப்
பார்க்குழைப்பா னென்று பதைப்பாருந் தமிழெனுமுந்
நீர்க்குழைப்பா னென்றுருகி நிற்பாரு மாய்க்கலங்க
ஆர்க்குழைப்பான் சென்றாய் அளியுடைய அண்ணலே!

*[உலைவார் - வருந்துவார், தமிழெனும் முந்நீர் - தமிழென்னும் கடல், அளி-அன்பு]*

22. Representative men of S. India, *பக். 178—9*

---

# திரு. ந. சஞ்சீவி, எம். ஏ., அவர்களின்

## மற்ற நூல்கள்

---

### வீரத் தலைவர் பூலித்தேவர்

'பூலித்தேவர்' என்ற புத்தகத்தைப் படித்து இன்புற்றேன். கலைமகளுக்குத் தக்க வகையில் நன்றி செலுத்தியிருப்பது உங்கள் பெருந்தகைமையைக் காட்டுகிறது.

—*கி. வா. ஜகந்நாதன்.*

### சங்க காலச் சான்றோர்கள்

இந்நூலைப் படிப்போர், வீர உணர்ச்சியையும், தமிழ்ப் பற்றையும், வாழ்வில் விறுவிறுப்பையும் பெறுவர் என்பது திண்ணம்.

—*பேராசிரியர் - ச. குருஸ் அந்தோணி.*

### சிலப்பதிகார விருந்து

எவ்வாறு ஷேக்ஸ்பியர் நாடகங்களில் பலப்பல நுணுக்கங்களை ஆய்ந்து மனக்கிளர்ச்சி அடைகிறோமோ அவ்வாறே சிலப்பதிகாரத்திலும் ஆய்ந்து மகிழும்படி ஆசிரியர் நம்மை இழுத்துச் செல்கின்றார்.

—*பேராசிரியர் - மா. கி. சண்முகம்.*

### மானங்காத்த மருது பாண்டியர்

உணர்ச்சி மிக்க இவர்களின் வரலாற்றைத் திருவாளர் ந. சஞ்சீவி எழுதியுதவியது காலத்திற்கு ஏற்ற நல்ல தமிழ் தொண்டாகும்.

—*பேராசிரியர்-டாக்டர். மு. வரதராசனார்.*


**பாரி நிலையம்**

59, பிராட்வே, சென்னை 1

Jacket Printed at Neo Art Press, Madras-2